# மதுரை





## ஐந்தாண்டின் சாதனைகள்

# மதுரை மாவட்டம்






## ஐந்தாண்டின் சாதனைகள்

(1951-56)



ஸ்ரீ ஸ்ரீபிரகாசா
சென்னை மாநில கவர்னர்





திரு காமராஜ்
முதலமைச்சர்



திரு எம். பக்தவத்ஸலம்



திரு ஏ. பி. ஷெட்டி



திரு S.S. ராமசாமி படையாச்சி



திரு சி. சுப்ரமண்யம்



திரு சண்முக ராஜேஸ்வர சேதுபதி



திரு M.A. மாணிக்கவேலு



திரு பி. பரமேஸ்வரன்

# பொருளடக்கம்

# நூல் முகம்

---

வானத்திலே வட்டமிட்டுத் திரியும் வண்ணப் பறவைகளும் காட்டிலே கவலையற்று வாழும் விலங்குகளும், "நாளை என்ன?" என்பதையே நினையாது வாழ்பவை. இன்று என்ன? என்பதுதான் அவைகளின் முதல் எண்ணம். ஆனால் மனிதன் அவ்வாறு வாழமுடியாது. அவ்வாறு வாழ நினைப்பதும் அறிவுடைமையாகாது.

இன்றைய நாளையும், வரப்போகும் நாளையும் எண்ணி அதற்கேற்ப வாழ்வை வகுப்பதில்தான் மனிதனின் உயர்வும், அமைதியும், பண்பும் விளங்குகின்றன. அப்போதுதான் அவன் கழிந்த நாட்களுக்காகக் கழிவிரக்கம்கொள்ளாமல் அமைதியான வாழ்க்கையை வாழமுடியும். இதனை நம் முன்னோர்கள் நமக்கு நன்கு வலியுறுத்திக் காட்டியுள்ளனர்.

துன்பம் வருவதற்கு முன்னர் அதனை அறிந்து தன்னை பாதுகாத்துக் கொள்ளாதவனின் வாழ்வு, எரிகின்ற தீயின் முன்னே இடப்பட்ட வைக்கோல் போரைப்போன்று அழிந்துபோய்விடும் என்னும் பொருளுடன், வள்ளுவரும்

“ வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும் ”

என்று கூறியுள்ளார்.

வள்ளுவன் வகுத்த அறநெறியிலே நிகழ்காலத்தையும், வருங்காலத்தையும் எண்ணி, நாடு முழுவதும் நலம் பெறும் வகையில் முதல் ஐந்து ஆண்டுத் திட்டம் நம் அரசாங்கத்தால் தீட்டப் பெற்றது.

1951-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் தொடங்கப்பட்ட இத் திட்டம் 1956-ஆம் ஆண்டு மார்ச் மாதத்தோடு முடிவடைந்தது. இத் திட்டத்தில் குறிப்பிட்டிருந்த எல்லாப் பணிகளையும் நாம் குறிப்பிட்டிருந்த காலவரையறைக்கு முன்பே முடித்துவிட்டோம். மக்களின் ஒன்றுபட்ட ஒத்துழைப்பினாலும், அரசாங்க ஊழியர்களின் ஆர்வத்தாலுமே நாம் இத் திட்டத்தை வெற்றிகரமான முறையில் சாதிக்க முடிந்தது.

இத் திட்டத்தின் தொடக்க காலத்தில் நம் மாநிலத்திற்குக் கிடைத்த மொத்த தொகை 86·43 கோடி ரூபாயாகும்.

தனித்தனியே ஒவ்வொரு துறைக்கும் கடந்த ஐந்து ஆண்டுகளில் ஆகிய செலவின் விவரத்தைச் சுருக்கமாகக் கீழே காணலாம்.

சென்னை மாநிலம்

முதல் ஐந்தாண்டுத் திட்டம்

(1951 ஏப்ரல் முதல் 1956 மார்ச் முடிய.)

ஒதுக்கப்பட்ட தொகை சுமார் ரூ. 86 கோடி.

செலவாகிய தொகை சுமார் ரூ. 84 கோடி.

| துறைகள் | ஒதுக்கப்பட்டது (லட்சத்தில்) ரூ. | செலவானது (லட்சத்தில்) ரூ. |
|---|---|---|
| வேளாண்மை ... | 902 | 857 |
| கால்நடை வளர்ச்சி | 56 | 43 |
| பால் பெருக்கம் ... | 13 | 16 |
| காடுகள் ... | 75 | 29 |
| கூட்டுறவு ... | 17 | 11 |
| மீன் துறை ... | 49 | 35 |
| கிராம வளர்ச்சி ... | 30 | 77 |

| துறைகள் | | ஒதுக்கப்பட்டது (லட்சத்தில்) ரூ. | செலவானது (லட்சத்தில்.) ரூ. |
|---|---|---|---|
| நீர்ப்பாசனம் | ... | 2,019 | 2,086 |
| மின்சாரம் | ... | 3,086 | 3,068 |
| குடிசைத் தொழில்கள் | ... | 44 | 52 |
| ஏனைய தொழில்கள் | ... | 128 | 113 |
| பாதைகள் | ... | 358 | 297 |
| கல்வி | ... | 494 | 406 |
| மருத்துவம் | ... | 248 | 248 |
| சுகாதாரம் | ... | 518 | 475 |
| மனையிடம் | ... | 190 | 152 |
| பின் தங்கிய வகுப்புக்கள் | . | 416 | 440 |
| மொத்தம் | ... | 8,643 | 8,414 |

நீர்ப்பாசனத்திற்கும் மின்சாரத்திற்கும் மட்டும் நூற்றுக்கு அறுபது ரூபாய்மேனியில்செலவழித்துள்ளோம். இதன் பயனாய் நாலு லட்சம் ஏக்கருக்கு இப்போது நீர் பாய்கிறது. பல கிராமங்களுக்கு மின்சாரம் வழங்கி அவைகளை ஒளியுடைய ஊர்களாக்கி உள்ளோம். மற்ற மாநில அரசாங்கங்களை விட இத்துறையில் நமது சாதனை மிகவும் பெருமைபடக்கூடிய முறையிலே உள்ளது.

முதல் திட்டத்தோடு நம்முடைய லட்சியங்கள் நிறைவெய்தவில்லை, நாட்டிலே இன்னும் உணவுக்குறைவும் தொழிலிலே பிற்போக்கும், மக்களிடையே வேலையில்லாத் திண்டாட்டமும் நிலவி வருகின்றன. இவை அனைத்தும் நீங்கினுலொழிய நாடு நலம் பெற்றுவிட்டது என்று கூறமுடியாது. மக்களின் வாழ்வும் மேனிலை எய்திவிட்டதாக அமைதி அடையமுடியாது.

இவை அனைத்தையும் போக்குவதற்குத்தான் முதல் ஐந்து ஆண்டுத் திட்டம் முடிந்தவுடனே, இரண்டாவது ஐந்து ஆண்டுத் திட்டம் தொடங்கப் பெற்றுள்ளது. இத் திட்டத்தால் நாடு பெரும் அளவுக்கு வளமடையும். பெரிய பெரிய தொழில்கள் தொடங்கப் பெறும். மக்களின் ஏழ்மையும் வேலையில்லாத் திண்டாட்டமும் ஒழியும். பஞ்சமும், பிணியும், துன்பமும், துயரமும் அடியோடு அழியும்.

இப் பெரும் திட்டங்கள் அனைத்தும் நிறைவேற மக்கள் அனைவரும் அரசாங்கத்துடன் ஒத்துழைப்பார்களாக! அரசாங்கம் வேறு, மக்கள்வேறு என்று யாரும் எண்ணக்கூடாது. மக்களின்

நல்வாழ்வே அரசாங்கத்தின் இனிய வாழ்வு. அரசாங்கத்தின் பயனே மக்களின் பயன். மக்களின் அரசாங்கம் தழைக்க மக்கள் அனைவரும் ஒத்துழைப் பார்களாக!



# வளமார் மதுரை

---

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்(து)
இருப்பிலே இருந்து வைகை ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள் !

முச்சங்கத்தைத் தோற்றுவித்து முத்தமிழ் வளர்த்த பொற்புடைத் தென்னவனின் புகழ்சால் மதுரையிலே இருந்தது இறுதிச் சங்கமாகும். முதலிரண்டு சங்கங்களும் முறையே தென் மதுரையிலும், கபாடபுரத்திலும் இருந்ததாகத் தமிழ் நூல்கள் கூறுகின்றன. கடல் கொந்தளிப்பிற்கு ஆளாகி நீரால் விழுங்கப்பட்ட நிலப் பரப்பினுள் அந்த மாநகரங்கள் இருந்திருக்கவேண்டும் என்பதை வரலாற்று ஆசிரியர்களும் ஓரளவு உடன்படுகின்றனர்.

வளமார் மதுரையின் எழில்சேர் மாடங்களும், கிரேக்க வீரர் காத்து நின்ற பொன் திகழும் திண்ணிய கதவங் களைக்கொண்ட அதன் பெரு வாயில் களும், 'ஆறு கிடந்தன்ன' அகன்ற அழகிய வீதிகளும், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தமிழகத்திற்கு வந்த பிற நாட்டினர், கண்டு வியந்த காட்சிகளாகும். அன்று தமிழ் தவழ்ந்த மதுரை இன்றும் தமிழ் வளர்க்கும் மதுரையாகவே இலங்குகின்றது.

வேனிற் காலத்திலே வைகை நதியின் இடைக் குறையிலேயுள்ள சோலையிலே புகுந்து ஆடவரும் மகளிரும் நீராடி மகிழ்ந்திருப்பதும், இளவேனிலில் நிலா முற்றமேறி நறுஞ்சாந்து பூசிக் களி கொள்வதும், கூதிர் காலத்திலே குறுங்கண் சாளரம் அடைத்து உறங்கு வதும் போன்ற இன்பக் காட்சிகளில் இடையறாது இந்நகர மாந்தர் மூழ்கி யிருந்த செய்தியைச் சிலப்பதிகாரம் சுவைபடக் கூறுகின்றது.

தென்னவன் செங்கோலால் சீர் பெற்றுத்திகழ்ந்த மதுரை இன்றுவரை தன் சிறப்பை இழக்கவில்லை. இடைக் காலத்தில் அதன் ஒளி சிறிது மங்கிற்

றேனும், தலைநகரம் என்ற சிறப்பை அது ஆங்கிலேயர் காலம் வரை இழக்க வில்லை. நாயக்கர் காலத்திலும் ராணி மங்கம்மாள் காலத்திலும் அந்நகர் பெற்ற கீர்த்தி இன்றுவரை நிலைத்திருக் கின்றது. இன்று அதற்கு ஒரு நாட்டின் தலைநகரம் என்ற தனிப்பெருமை இல்லாமல் போயினும், கலையின் தலை நகராக விளங்கும் பேற்றினை அது பெற்றிருக்கிறது. தமிழகத்தின் இரண் டாவது பெரிய நகராகவும் திகழ்கின் றது. சுமார் ஐந்து லட்சம் மக்களைக் கொண்ட அந்நகர் 5 சதுர மைல் பரப் புடையதாக இன்று உள்ளது.

இத்தகைய சிறப்பு மிக்க மதுரை யைத் தலை நகரமாகக் கொண்ட மதுரை மாவட்டம் நீர்வளம், நில வளம் மிக்க ஒரு பகுதி. மதுரை மாவட்டத்தின் பரப்பு 3,115,718 ஏக்க ராகும். இதில் உள்ள விளை நிலப் பகுதி 1,170,342 ஏக்கராகும். எஞ்சிய பகுதியில் மரங்களடர்ந்த காடுகளாக 394,145 ஏக்கர் உள்ளது. விளை நிலப் பரப்பு 1951-ஆம் ஆண்டில் இருந்த தைக் காட்டிலும் இப்பொழுது மிகுதி என்பது குறிப்பிடத்தக்கது. அன் றிருந்த பரப்பு 1,137,645 ஏக்கரே.

மதுரை மாவட்டத்தில் உள்ள கோடைக்கானல் இயற்கைஅன்னையின் எழிற்கூடம்; வளமாருந் தண்ணறுஞ் சோலை. அங்கேயுள்ள அருவியும், ஏரியும் கண்களுக்கு விருந்து; கருத்துக்குக் காவியம்.

பழனிமலை பற்றிப் பகரவும் வேண்டுமோ? பன்னெடும் மைல்கள் கடந்து அப்பழமுதிர் சோலை வேலவனைக் காண வரும் பக்தர்கள் எண்ணற்றோர்.

இன்னும் திருப்பரங்குன்றம், அழகர் மலை இவற்றின் பெருமைகளுக்கும் அளவுளதோ?



“ தாதுகு சோலை தோறும் சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும் புதுமணத் தடங்கள் தோறும்
மாதவி வேலிப் பூக வனந்தோறும் வயல்கள் தோறும்
ஓதிய உடம்பு தோறும் உயிரென உலாயதன்றே ”

—கம்பராமாயணம், பால காண்டம், ஆற்றுப் படலம் 20.




# நீர் . . . பெருக!

## நீர்ப் பாசனம்

புறநானூற்றில் ஓர் அழகான பாட்டு. ஒரு புலவன் ஓர் அரசனுக்கு அறிவுரை கூறுவதாக அது உள்ளது. நமக்கு வேண்டிய அடிகளை மட்டும் இங்கு பார்ப்போம். "உண்டி முதற்றே உணவின் பிண்டம், உணவு எனப்படுவது நிலத் தொடு நீரே". இதன் பொருள் வெளிப்படையாகத் தெரிகிறது. உணவாலாகிய இந்தப் பிண்டம் (உடல்) உணவையே அடிப் படையாகக் கொண்டு வாழ்கிறது. நம்மை யெல்லாம் சோற்றுப் பிண்டம் என்கிறார்! மெய்யான வாக்கு. அந்த உண்டிக்கு அல்லது உணவுக்கு அடிப்படையாக உள்ளது எது? நிலனும் நீரும். இதைத்தான் நாம் நன்றாக மனதில் பதித்துக் கொள்ளவேண்டும்.

பருவம் என்றும் எங்கும் ஒரே நிலையில் இருப்பதில்லை. பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு பருவம் தவறாமல் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிய எத்தனையோ ஆறுகளும் சிற்றோடைகளும் இன்று பாழடைந்து கிடக்கின்றன. நம்



பாதத்தைக் குத்தித் துளைப்பதற்காகப் பரல் கற்கள் பல்கிக் கிடக்கின்றன. நீர் நிரம்பித் ததும்பி வழிந்த ஏரிகளும் பல இடங்களில் முட்செடிக் காடுகளாக மாறிவிட்டன. இவ்வாறு இயற்கை நமக்கு இடுக்கண் பல விளைவித்தபோதிலும் 'இயற்கை சூழ்ச்சி செய்கிறது, என்ன செய்வது? என்று நாம் ஏங்கி உட்கார்ந்து விடவில்லை.

நம் நாட்டின் ஆட்சி மக்கள் கைக்கு வந்ததும் அமைச்சு பூண்டவர்கள் பயிர்த்தொழிலுக்கு மூலமாக விருக்கும் இந்த நீரைப்பற்றித்தான் முதலில் எண்ணிப் பார்த்தனர். 'நிலனொடு நீரே' என்பதை அவர்கள் மறக்கவில்லை. அரிதில் முயன்று பல திட்டங்களை உருவாக்கினர். அவர்களுடைய முழு நோக்கமும் நிலத்தைப் பண்படுத்துவதிலும் நீரைத் தேக்குவதிலுமே சென்றது. அதற்காக அவர்கள் பட்ட அல்லலும், செல்வத்தைத் திரட்டுவதில் அவர்களுக்கு ஏற்பட்ட தொல்லைகளும் ஒருபுறம் இருக்கட்டும். அவர்கள் செய்தது என்ன என்பதை நாம் முதலில் காண்போமாக.

ஐந்தாண்டுத் திட்டம் என்ற சொல் இன்றைய குழந்தைக்கும் பழக்கமான ஒரு சொல்லாகி விட்டது. எத்தகைய வளம் படைத்த, உழைப்பு மிகுந்த நாடும் திட்டமிட்டுச் செயலாற்றினால் தான் எதிலும் வெற்றிபெற முடியும் என்பது அனைவருமறிந்தது. எனவேதான் நமது முதல் ஐந்தாண்டுத் திட்டமும் உருவாகியது.

இந்தியாவின் வடக்குப் பகுதியில் ஓடும் ஆறுகளைப் போன்ற பெரிய ஆறுகள் தெற்குப் பகுதியில் கிடையா. இங்கு பெரிய நதிகள் எனக்கூறத்தக்கவை ஒன்றிரண்டே உள்ளன. இவற்றைக் கொண்டே நீரைப் பெருகச் செய்வது எளிதான காரியமல்ல. இருப்பினும் நம் அரசாங்கம் ஒரு சொட்டு நீரைக் கூட வீணாகக் கழிய விடாமல் செய்தேனும் நீரைப் பெருகச் செய்யும் முயற்சியில் இறங்கியது. புதிய திட்டங்களைப் போடுவதோடு ஏற்கனவே உள்ளவற்றைப் பழுது பார்த்துச் செம்மைப் படுத்தவும் துணிந்துள்ளது.

கிணறு, ஏரி இவற்றிலும் போதிய கவனம் செலுத்தினாலன்றி நம் நீர்த்தேவை பூர்த்தியாவது கடினம். மின்சார வளர்ச்சியில் இந்தியாவிலேயே முன்னோடியாக விருக்கும் நமது மாநிலம், அந்த மின்சாரத்தில் பெரும் பகுதியை நீரிறைப்புக்குத் தான் பயன்படுத்தியுள்ளது என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

நீர்ப்பாசனத்திற்கென ஒதுக்கப்பட்ட தொகை 2,019 லட்ச ரூபாய். ஆனால் தேவையின் காரணமாக மேலும் 69 லட்சம் கூடுதலாகவே இதற்குச் செலவிடப்பட்டது. நீர்ப்பாசன வசதி செய்து தருவதில் அரசாங்கம் எவ்வளவு ஆர்வம் கொண்டிருக்கிறது என்பது இதனால் நன்கு வெளியாகிறது. அதன் இன்றியமையாமையைத் தெளிவாக உணர்ந்தே நம் மக்கள் மன்றம் செயலாற்றி வருகிறது என்பதில் ஐயமில்லை. ஆங்கில ஆட்சியின் போது நம் சென்னை மாநிலத்தின் (ஆந்திர



மாநிலத்தையும் சேர்த்து) நீர்ப்பாசன வசதிக்காகச் செய்யப் பட்ட செலவு சுமார் 18 கோடி ரூபாயாகும். ஒரு வருடத்தில் அல்ல ; 150 ஆண்டுகளாகச் சிறுகச்சிறுக ஆங்கில அரசாங்கம் அருள் பாலித்ததில் ஆகிய மொத்தச் செலவே இவ்வளவு தான் ! ஆனால் நாம் உரிமையடைந்து நான்கைந்து ஆண்டு களுக்குள் அரசாங்கம் செலவிட்டுள்ளது ஏறக்குறைய ரூ. 20 கோடி யாகும். முதல் ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் சுமார் ரூ. 21 கோடி செலவிட்டுள்ளது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் சுமார் ரூ. 14 கோடியைச் செலவிட எண்ணி யுள்ளது.

கடந்த ஐந்தாண்டுகளில் மதுரை மாவட்டத்தில் அரசாங்கம் ஆற்றிய நீர்ப்பாசன சம்பந்தமான திட்டங்களைப் பார்ப்போம்.

பலவேறு வகையான திட்டங்களில் முனைந்து நின்றது எனினும் அவற்றுள் மிகப் பெரியது வைகை நீர்த்தேக்கத் திட்டமே.

## வைகைத் தேக்கம்

வைகைத் தேக்கத் திட்டம் 1954-ஆம் ஆண்டின் இறுதியில் அனுமதிக்கப்பட்டது. ரூ. 3·3 கோடி இதற்குச் செலவாகலாம் என மதிப்பிடப்பட்டுள்ளது. 1959-ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் இது முடிவடையலாம் என முதலில் எண்ணினர். ஆனால் பிறகு வேலைகள் நடந்து கொண்டிருக்கும் விரைவினைப் பார்த்து விட்டு 1958-ஆம் ஆண்டிலேயே முடிக்க முடியும் எனத் துணிந்துள்ளனர்.

மதுரை மாவட்டத்தின் மழையளவு ஆண்டுக்குச் சராசரி 30 அங்குலமாகும். பெரியாற்றின் மூலம் இந்த மாவட்டத்தில் ஏற்கனவே பயனடைந்து வரும் நிலப்பரப்பு 120,000 ஏக்கராகும்.

பெரியாற்றின் குறுக்கேயுள்ள அணையால் நலம்பெறும் நிலங்கள் போக எஞ்சிய நீர், இதுவரையில் எதற்கும் பயன் படாமல் வீணாகி வந்தது. அந்நீரை வைகை நதியில் திருப்பி விட்டு, வைகையின் குறுக்கே ஒரு தேக்கத்தை ஏற்படுத்துவதே வைகைத் தேக்கத் திட்டத்தின் நோக்கமாகும். மீதமாகி வரும் நீர் சராசரி 40 கோடி கன அடியுள்ளது. மேலும் பெரியாறு ஏரியின் நீரைப் பயன்படுத்தி மின்னாற்றலை உண்டாக்கவும் ஒரு திட்டம் உள்ளது. அதற்குப் பயன்படும் நீரும் முடிவில் வைகைத் தேக்கத்திற்குத்தான் வந்து சேரும்.

வைகைத் தேக்கத்தால் சுமார் 20,000 ஏக்கர் நிலப்பரப்புக்கு நீர் பாயும். பெரியாற்று ஏரியிலிருந்து மீந்து வரும் நீரையும், வைகையாற்றில், பாய்ந்ததுபோக எஞ்சிவரும் நீரையும் இது தேக்கும். 20,000 ஏக்கரில் சுமார் 3,000 ஏக்கர் ஏற்கனவே



நீரைத் தடுக்க நிமிர்ந்தெழும் பெருஞ்சுவர்

பெரியாற்றால் பயனடைந்து வரும் ஆயக்கட்டு நிலங்களுக்கு இடையே உள்ளது. நீர் பற்றாக்குறையினால் இப்பொழுது அது சரியாகப் பயிரிடப்படாமல் இருக்கின்றது. 7,000 ஏக்கர் வைகை நதிக்கு இடது புறத்திலேயுள்ள பகுதி. அது இராம நாதபுரம் மாவட்டத்திலுள்ள சிவகங்கை வட்டத்தைச் சேர்ந்தது. இப்பத்தாயிரம் ஏக்கரும் நீண்ட நாட் பயிருக்குப் போதிய அளவு நீரைப்பெறும். வைகையின் வலப்பக்கத்தே மதுரை மாவட்டத்திலுள்ள 10,000 ஏக்கர் நிலம், குறைந்தகாலப் பயிருக்குத் தேவையான நீர் வசதி பெறும்.

பெரியகுளம் வட்டத்தில் அமைந்து வரும் இந்த அணையால் ஏற்படும் தேக்கத்தின் பரப்பு சுமார் 870 சதுர மைலாகும். அணையின் நீளம் சுமார் இரண்டேகால் மைல் [11,675 அடி]. இதில் கல் அணைப் பகுதியின் நீளம் கழிவாய்ப்பகுதி உள்பட

1,035 அடி. தேக்கம் மிகும்பொழுது நீர் விழுகின்ற கழிவாய் அதன் நடுவே இருக்கும். கழிவாய் அல்லது கழிங்கின் நீளம் 334 அடியாகும். கல் கட்டிடம், கழிங்கிற்கு இடது புறத்தில் 466 அடிகொண்டதாகவும், வலது பக்கத்தில் 235 அடி கொண்டதாகவும் இருக்கும். கல்லணையைத் தொடர்ந்து இடப்புறம் 1,780 அடியும், வலமருங்கில் 8,860 அடியும் கொண்டதாக மண் அணை இருக்கும். ஆற்றுமட்டத்தி லிருந்து அணையின் உயரம் 106 அடி. தேக்கம் பெருகி உச்சமட்டத்தை அடையும்பொழுது 9 சதுர மைல்களுக்கு நீர் பரவிநிற்கும். தொந்நூறு ஏக்கரா நஞ்சை நிலங்கள் அதனுல் பாழாகலாம். எந்த நன்மையும் சிறிது தீமையோடு கலந்தே வரும் என்ற உண்மையை இங்கு காணுகின்ருேம். தேக்கத்தால் கிடைக்கவிருக்கும் பயனை நோக்க, நீரில் மூழ்க விருக்கும் இப்பரப்பினுல் விளையும் கேடு ஒன்றும் பெரிதல்ல. பலருக்கு நன்மை கிடைப்பதற்கு ஒரு சிலரேனும் தம் வாழ்வைப் புறக்கணித்துப் போராட வேண்டி இருக்கிறதல்லவா ? அதைப்போலத் தான் இதுவும். அப்பகுதியிலுள்ள 14 ஊர்களையும் வேறிடம் பெயர்க்க அரசாங்கம் ஆவன செய்து வருகின்றது.

மதுரை மாவட்டத்திலுள்ள திருமங்கலம் வட்டத்தில் சுமார் 20 மைல் நீளமுள்ள கால்வாய் ஒன்று தோண்டி வருகின்றனர். இதன் மூலம் 10,000 ஏக்கர் நிலத்திற்கு நீர் பாயும். வைகைத் தேக்கம் இக்கால்வாய்க்கு நீரளிக்கும். இராமநாதபுரம் மாவட்டத்தில் இரண்டு பழைய கால்வாய்கள் செப்பனிடப்பட்டுள்ளன.

அணையில் அஸ்திவாரம் போடும் வேலை விரைவாக நிறைவேறிக் கொண்டிருக்கின்றது. திருமங்கலத்தில் 7 மைலுக்கு மேல் கால்வாய் தோண்டப்பட்டுவிட்டது. மற்றும் அணைக்கட்டு வேலையில் ஈடுபட்டுள்ளோருக்கு வேண்டிய குடியிருப்பு, குடிநீர் முதலிய வசதிகளும் முடிவுற்றிருக்கின்றன.

சிறிய திட்டங்களிலும் போதிய நோக்கம் செலுத்தப்பட்டுள்ளது. எண்ணற்ற சிறிய தேக்கங்களேயும் ஆயக்கால்களேயும் பழுது பார்த்துள்ளனர். கடந்த ஐந்தாண்டுகளில் செப்பனிடப் பட்ட வேலேகளின் எண்ணிக்கை 1,007 ஆகும். அதற்கான செலவு 11,89,206 ரூபாய். அதனுல் பயனடைந்த மொத்த நிலப் பரப்பு 32,833·88 ஏக்கர்.

நீர்ப்பாசனத்துக்காக இன்னும் பல தேக்கத் திட்டங்கள் இரண்டாவது ஐந்தாண்டில் சேர்க்கப்படவிருக்கின்றன. அவைகளேச் சுருக்கமாகக்கீழே தந்துள்ளோம் :—

(1) பதினேந்து லட்ச ரூபாய் செலவில் பெரியாற்றின் நீர்க் கழிவாயைத் தாழ்த்துவது. இத் திட்டம் அனுமதிக்கப் பட்டுவிட்டது. அது முடிவுற்றதும் 4,000 ஏக்கர் நிலம் நல்ல பயனடையும்.

(2) பாலாறு பொரந்தலாறுத் திட்டத்தை இரண்டாவது ஐந்தாண்டில் எடுத்துக்கொள்வதுபற்றி சிந்தித்து வருகின் றனர். நூற்று ஐம்பத்து நான்கு லட்ச ரூபாய் இதற்காகும். பழனி வட்டத்தில் 10,872 ஏக்கர் இதனுல் பயனுறும்.

(3) பரபாலாறுத் திட்டம் மேலும் ஆராயப்படுகிறது. முடிவைப் பொறுத்து இன்னும் 37 லட்ச ரூபாய்ச் செலவில் அத்திட்டம் விரிவாக்கப்படும். அதனுல் பழனி வட்டத்தில் 800 ஏக்கர் பரப்பு கூடுதலாகப் பாயும்.

இவையன்றி கடந்த ஐந்தாண்டுகளில் வேளாண்மைத் துறையினுல் நீர்ப் பாசனத்திற்காக இம் மாவட்டத்தில் பல காரியங்கள் செய்யப்பட்டுள்ளன. நூற்று ஆறு குழாய்க் கிணறுகள் அமைக்கப்பட்டன். மேலும் எண்ணே, மின்சார இறைப்பு யந்திரங்கள் வாங்குவதற்குக் கடன் தரப்பட்டது. இவற்றிற்காகச் செய்யப்பட்ட கடனுதவி 2,04,888 ரூபாய்களாகும்.

## மின்சாரம்

**இன்றைய நிலை.**—மின்சாரம், மனிதனின் அன்றாட வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒரு பொருளாகிவிட்டது. சென்னை போன்ற நகரங்களில் ஒரு நாளைக்கு மின்சாரம் நிறுதப்பட்டால் என்ன நேரும் என்பதைக் கற்பனை செய்து பாருங்கள் ! இழவு விழுந்த வீடுபோல் காட்சியளிக்கும். மின்சாரம் இல்லாமலும் வாழமுடியும் ; ஒரு காலத்தில் மக்கள் அதன் துணை இன்றித் தான் வாழ்ந்தனர் ; என்பவைகளை நம்புவது கூடக் கடினம். ஹரப்பா, மொகொஞ்சோதாராவில் வாழ்ந்த பழந் திராவிடரின் நாகரிகத்தையோ, ஈஜிப்டு அல்லது எகிப்தின் பண்டையப் பெருமையையோ, கிரேக்க ரோம நாடுகளின் இன்பக் கொண்டாட்டத்தையோ வரலாற்றில் படிக்கும் பொழுது அவை மின்சாரத்தின் துணையின்றியே அத்தகைய உயர்வை எய்தியிருந்தன என்ற எண்ணமே நமக்குத் தோன்ற மறுக்கின்றது. இவ்வாறு இன்றைய வாழ்வில் பின்னிப் பிணைந்துள்ள மின்சாரம், நமது நாட்டைப் பொறுத்த மட்டில், கொஞ்ச நாட்களுக்கு முன்புவரையில் நகரத்தை விட்டு அப்பால் நகரவில்லை என்பதை நாம் மறந்துவிடலாகாது.

**நேற்றைய நிலை.**—உலகமெங்கும் சமையல் முதலிய வற்றிற்கும் மின்சாரம் பெருவாரியாகப் பயன்படுத்தப் பட்டுவந்த ஒரு சமயத்தில், நமது இந்திய நாட்டின் சிற்றூரிலுள்ள மக்களோ மின்விளக்கைக்கூட கண்ணால் பார்த்தறியாத நிலையில் வாழ்ந்தனர். ‘ இருட்டறையில் உள்ளதடா உலகம் ’ என்ற உண்மை அவர்களைப் பொறுத்த மட்டில் எப்படிப் பார்த்தாலும் பொருந்துவதாக இருந்தது. ஆங்கிலேயருக்குத் தம் பெட்டி மீதுதான் குறியிருந்தது. ‘ மக்கள் எக்கேடு கெட்டால் என்ன ? மகேசுவரனுக்குப் பூசை நடந்தால் சரி ’ என்று அவர்கள் கவலையற்று வாழ்தல் இயல்பு.



பரந்துகிடக்கும்

மக்களாட்சி தோன்றியதும் நிலைமாறியது. மின்சாரத்தை நிறைய உற்பத்தி செய்யவும், நாட்டுப்புறத்தில் உள்ளவருக்கும் மற்றவருக்கும் இயன்ற அளவு அதன் பயன் கிடைக்குமாறு செய்யவும், தக்க முயற்சிகள் எடுக்கப்பட்டன. கிராமங்களுக்கு மின்சாரமிடுவதில் இன்று முதலிடத்தைப் பெறுவது நம் சென்னை மாநிலமே என்பது நமக்குப் பெருமை தரக்கூடிய ஒன்றாகும்.

**சென்னை அரசாங்கம்,**— நம் மாநில அரசாங்கம் நாட்டுப் புறத்திற்கு மின்சார வசதியளிப்பதில் வாயுவேகம் மனோ வேகமாக ஓடியது. சுமார் ரூ. 31 கோடியைக் கடந்த ஐந்தாண்டுகளில் மின்சாரத்துக்காக மட்டும் செலவழித் திருக்கிறது. மற்ற எல்லாத் துறைகளைக் காட்டிலும் இந்தத்



வைகைத் தேக்கம்

துறையே மிகுதியான பொருளை பயன்படுத்தியது. பலனும் கைமேல் கிட்டாமலில்லை. 1951-ல் மின்சாரம் பெற்ற ஊர்களின் எண்ணிக்கை, நகரங்கள் உட்பட 1,613. முதல் திட்ட கால முடிவில் மின்வசதி பெற்றிருக்கும் ஊர்களின் எண்ணிக்கை 3,321. ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நமது மாநிலத்தில் மின்சார வசதி பெற்ற கிராமங்கள் மட்டும் 2,900. 3,000 மின்சார இறைப்புக் குழாய்கள் அமைத்ததும், 3,000 கிராமக் கைத்தொழில்களுக்கு மின்சார வசதி அளித்ததும், நமது மாநிலத்தில் சென்ற ஐந்தாண்டுகளில் மேலும் நிறைவேறிய பிற வேலைகளாகும்.

மதுரை மாவட்டத்தில் முதல் ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் மின்வசதி பெற்ற ஊர்களின் எண்ணிக்கை 14. பதினான்கு

ஊர்களிலும் 4,418 வீடுகளுக்கு மின் விளக்குகள போடப் பட்டன. தெரு விளக்குகளின் எண்ணிக்கை 1,170. இவற் றிற்கான செலவு 8 லட்சம் ரூபாயாகும். 609 கிணறுகளுக்கும், 2 தொழிற்சாலைகளுக்கும், சுமார் 18 லட்சம் ரூபாய் செலவில் மின்சார வசதி செய்துதரப்பட்டிருக்கிறது.

பஞ்சாலை ஒன்றிற்கும், வைகை நீர்தேக்கத் திட்டத் திற்கும் அதிக மின்சாரம் அளிக்கப்பட்டது. அதற்கான செலவு 1·15 லட்சம் ரூபாய் ஆகும். மேலும், கீழ்க்கண்ட வற்றிற்கு மின்சாரம் அதிகமாக அளிக்கப்பட்டிருக்கிறது:—

| | | | |
|---|---|---|---|
| வீட்டு விளக்குகள் | .. | .. | ..6,502 |
| கடை விளக்குகள் | .. | .. | .. 215 |
| உழவு (இறைப்பு) | .. | .. | .. 948 |
| தொழில்கள் | .. | .. | .. 70 |
| படக்காட்சிகள் | .. | .. | .. 5 |

மொத்தத்தில் 58 கிராமங்கள் இந்த மாவட்டத்தில் மின்சார வசதி பெற்றிருக்கின்றன. இவற்றின் விளைவாக 70 மைல் உயர்ந்த மின்சாரத் தொடரும், 175 மைல் குறைந்த மின்சாரத் தொடரும் அதிகமாகப் போடவேண்டிய தாயிற்று ; மின்சார நிலையங்களும் நிறையத் திறக்க வேண்டியதாயிற்று. யாவற்றிற்குமாக ஏற்பட்ட செலவு ரூ. 27·1 லட்சம். மதுரை மாவட்டத்தில் மின்சாரம் போடப் பட்டுள்ள ஊர்களின் பெயர்கள் கீழே தரப்பட்டுள்ளன.—

**திண்டுக்கல் வட்டம்—(1)** ஆலமரத்துப்பட்டி, **(2)** ஐயம் பாளையம், **(3)** சித்தையங்கோட்டை.

**கோடைக்கானல்—(1)** செம்பகனூர், **(2)** முஞ்சிக்கரைச் சந்திப்பு,

நிலக்கோட்டை—(1) காமநாய்க்கனூர், (2) அளங்கா நல்லூர், (3) இரும்படி, (4) கர்ருபட்டி, (5) லட்சுமிபுரம், (6) மீனாட்சிபுரம், (7) பழமேடு, (8) நாச்சிகுளம், (9) காடு பட்டி, (10) முனிகத்தூரன்பட்டி.

பழனி—(1) வேலாயுதன்பாளையம், (2) பால சமுத்திரம்.

பெரியகுளம்—(1) ஊஞ்சம்பட்டி, (2) பாலகிருஷ்ணபுரம், (3) காங்குவாரபட்டி, (4) சுக்கள் கைப்பட்டி, (5) கோவிந்த நகரம், (6) மல்லையகவுண்டன்பட்டி, (7) மாசிக்குண்டு, (8) சுப்ளாபுரம், (9) தேவதானப்பட்டி, (10) கூடலூர், (11) பழனிச்செட்டிபட்டி, (12) கருப்பதேவன்பட்டி.

மதுரை—(1) பரவை, (2) சிந்தாமணி, (3) அனுப்பானதி, (4) தோடனேரி, (5) வானேலியூர், (6) அனுமார்பட்டி, (7) பெருமாள் பட்டி, (8) ஊகங்குடி, (9) ஒத்தக்கடை, (10) ராஜ கம்பீரம்.

திருமங்கலம்—(1) வரப்பானூர், (2) கவண்டன்பட்டி, (3) புதுப்பட்டி, (4) தொட்டப்புநாய்க்கனூர், (5) கிருஷ்ணபுரம், (6) சின்னம்பட்டி, (7) பாபநாய்க்கன்பட்டி, (8) சின்ன போக்கன்பட்டி, (9) பெரியபோக்கன்பட்டி, (10) சோலைபட்டி, (11) பேய்குளம், (12) குஸ்ஸாளகூடு, (13) போதுச்செட்டி பட்டி, (14) தட்டியபட்டி.

மேலூர்—(1) கோயில்பட்டி, (2) செல்லப்பநாய்க்கன் பட்டி, (3) வேலம்பட்டி.

மதுரை மாவட்டத்தில் மின்சாரத்துறையில் ஏற்பட்டிருக்கின்ற முன்னேற்றம் முழுவதையும் இதுவரையில் பொதுவாகக் கண்டோம். நாட்டுப்புறத்திற்கே இதில் சிறப்பாகக் கவனம் செலுத்தப்பட்டிருக்கின்ற தென்பதும், மாட்டைக்கட்டி இன்னலுற்ற உழவன் எல்லையற்ற பயன் எய்தியுள்ளான் என்பதும், சிறப்பாக நினைவில் வைத்துக்கொள்ளத்தக்கவை.

—x—

" நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே "

—புறநானூறு 187.




# நிலம்... கொழிக்க!

பருவம் பொய்த்ததனுலும், மக்களின் வறுமை மிகுந்ததனுலும் பாழாகிய காடுகள் இந்த மாநிலத்தின் நிலவளத்திற்கு நேர்ந்த முதற்பெருங் கேடாகும். ஆயிர மாயிரம் ஆண்டுகள் உழுது உழுது, நிலத்தின் உரத்தை யெல்லாம் உறிஞ்சி விட்டதனுல் வளங்குன்றிப் போயிருக்கின்ற விளை நிலங்கள், நம் மாநிலத்தின் நிலக் கொழுமைக்கு நிகழ்ந்துள்ள இரண்டாவது கேடாகும். இவ்விரு இடர்களையும் போக்கி மீண்டும் நம் நிலங் கொழிக்க, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் செய்யப்பட்டவை இன்னின்ன என விளக்கமாகக் காணுவோம்.

## காடுகள்

வையத்தின் வனப்பும் வறுமையின் கோலமும்—காடுகள், இயற்கை அன்னை நல்கிய செல்வம். வையம் தோன்றிய

காலந்தொட்டு அதன் வளப்பத்திற்கும், அழகிற்கும், மங்காத ஊற்ருக இருப்பவை அவைகளே. தென்றல்காவும் தேனிய நறுஞ்சுனைகளும் தரும் தெவிட்டாத இன்பத்தை நுகர மறுக்கும் விலங்கைக்கூட இவ்வுலகினில் காண்பதரிது. எனினும் மனிதனின் வறுமை அவன் கண்களைக் குருடாக்கிவிட்டது; காதுகளைச் செவிடாக்கிவிட்டது; நாசித்துவாரங்களைத் தூர்த்து விட்டது; அந்த நச்சுத்தீ அவன் உடல் உணர்ச்சியைக்கூட மரத்துப்போகும்படிச் செய்துவிட்டது. காடுகள் நல்கும் செல்வத்தை மட்டுமே பயன்படுத்திய மனிதன், பற்ருக் குறையினுல் பின்னர் காடுகளையே பயன்படுத்தத் தொடங்கி விட்டான். பல செறிந்த காடுகளின் பச்சைப் பசேலென்ற துதைந்த தூறுகள் வான் முகட்டை அளந்து கொண்டிருந்த வளமார் இடங்களெல்லாம், வளங்குன்றிப் பொட்டல் வெளிகளாகவும், கொடியபாலைகளாகவும் கேடுற்றன. ஆடல், பாடல், அழகு அனைத்தாலும் சிறந்து, பண்புடன் இணைந்து வாழ்ந்த மாதவியணங்கு, அனைத்தையும் துறந்து, கொடிய துறவுக் கோலத்தை மேற்கொண்டதினும் கொடியதன்ருே இச் செய்கை ?

**நம்மாட்சி**—மக்களின் ஆட்சி இதனைப் புறக்கணித்து விட முடியுமா ? மண்ணுக்கடியில் ஒளிந்து கொண்டிருக்கும் செல்வத்தையே 'விடமாட்டோம்' என்று கூறி வெளிக் கொணர்ந்த நம் அரசாங்கம், இதனையா விட்டு வைக்கும் ?

**இருதலைக் கொள்ளி**—ஏற்கனவே காடுகள் அழிந்து வருவதன் விளைவாக, விறகு விலை ஏறிவருகிறது. காடுகளை மேலும் அழியாமல் காப்பதற்கோ அரசாங்கம் முந்துகினறது. அது, தான் உடனடியாகச் செய்யவேண்டிய பணியென்பதையும் அரசாங்கம் உணர்கின்றது. எவ்வளவு இக்கட்டான நிலை ?

**தளரா உழைப்பு**—எல்லா இடங்களிலும் மண்ணை வள மாக்குதல், பல வகை மரங்களை அங்கு நடுதல், உள்ள வற்றைக் கூடியவரையில் பாதுகாத்தல், ஆகிய வேலைகளில் அரசாங்கம் ஊக்கமுடன் விரைந்து தொழில் புரிந்தது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில், இதற்காக 75 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டது. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் செல விடப்போகும் தொகை இதைப்போல் இன்னும் இரண்டு மடங் காகும். 146·20 லட்சம் ரூபாய் நம் மாநிலத்தில் இதற்குப் பயன்படுத்தப்படும்.

**மதுரை மாவட்டத்தின் நிலை**—மதுரை மாவட்டத்தில் செறிந்த காடுகள் பல உள்ளன. இங்குள்ள காடுகளின் மொத்தப்பரப்பு 394,145 ஏக்கராகும். மதுரை மாவட்டத் தின் மொத்தப் பரப்பு 3,115,718 ஏக்கர். எனவே மதுரை மாவட்டத்தில் சுமார் எட்டில் ஒரு பங்கு காடுகளால் அழகு படுத்தப் பட்டிருக்கிறதெனலாம்.

இங்குள்ள காடுகளும், வறுமைக்கு ஆளாகி வறண்டுதான் இருந்தன. எனினும் நம் அரசாங்கம் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் மேற்கொண்ட சில முயற்சிகள் நல்ல பயனைத் தந்துள்ளன. 4,918 ஏக்கரில் பலவேறு முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டன. இவற்றை உயிர்ப்பிக்கச் செலவிடப்பட்ட தொகை ரூ. 2,31,712. மேலும் சுமார் 2,387 ஏக்கர் வறண்ட பாலையை, வளமார் சோலையாக்கும் முயற்சியில் 59,000 ரூபாய் செலவாகியது.

மெல்லிய மரவகைகளை வளர்க்கும் முயற்சியில் செல வழிந்த தொகை ரூ. 689 ஆகும். 25 ஏக்கரில் உண்டாக்கப் பட்ட இம் மெல்லிய மரவகை (soft-wood)யினால் நெருப்புக் குச்சிகளின் தேவை நிறைவேறியுள்ளது.

பட்டை, எண்ணெய் ஆகியவை தரும் மரவகைகளைப் பயிரிட 1,60,865 ரூபாய் செலவாயிற்று. இதனால் பயன்பெற்ற

நிலப்பரப்பு 2,249 ஏக்கராகும். தாழ்ந்த குன்றுகளில் வளம் வற்றிக்கிடந்த மண், வளம் பெறுவதற்கான முயற்சியும் இந்த மாவட்டத்தில் மேற்கொள்ளப்பட்டது. 257 ஏக்கர் நிலம் இதனால் செழுமை பெற்றது. 11,157 ரூபாய் இதற்காகச் செலவிடப் பெற்றது.

**கைமேல் பலன்**—இவ்வாறு காடுகளை உயிர்பெறச் செய்யும் வேலையில் மதுரை மாவட்டம் பெருவெற்றி பெற்றது. மெல்லிய மரங்களும், பட்டைதரும் மரங்களும், நெருப்புக் குச்சி செய்தல், தோல் பதனிடுதல் ஆகிய தொழில்களை வளமுறச் செய்திருக்கின்றன.

**எழில் பொங்குக**—பொட்டல் வெளிகளில் இன்று காடுகள் வளர்கின்றன. வறு வெளியெங்கும் இனி வனங்களின் வனப்புக் கமழும்; அன்றில் அகவும்; குயில் கூவும்; மயில் ஆடும். அத்தகைய எழில் மிக்க நன்னாளை மக்களைக் காட்டிலும் மக்கள் மன்றம் ஆவலோடு எதிர் நோக்குகின்றது. முதல் திட்டத்தில் 75 லட்சம் ரூபாய் ஒதுக்கிய நம் மாநில அரசாங்கம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதற்கு 146 லட்சம் ரூபாயை ஒதுக்கியுள்ளது.

## வேளாண்மை

கவிஞர்கள் கனவிலே கண்ட புஷ்பக விமானமும், மயிற் பொறியும் இன்று நம் கைக்கெட்டிய பொருள்களாகிவிட்டன. மின்னல், இடி முதலிய இயற்கை ஆற்றல்களைக்கூடப் படைத்து ஆள இன்றைய மனிதன் துணிந்து விட்டான். பெயல், 'பெய்' யென்றால் பெய்கிறது. 'நில்' லென்றால் நிற்குமோ என்னமோ நமக்குத் தெரியாது. இந்த உலகிலே இருக்க இடம் போதவில்லையென்று, 'நிலா மண்டிலத்திற்குச் செல்வேன்' என விரைகிறான் விஞ்ஞானி. அவனை வேண்டா

மென்று தடுக்கவோ, 'உன்னால் முடியா' தென்று மறுக்க வோ ஆளில்லை. இத்தனைக்கும் பிறகும் மனிதன் ஒன்றின் முன் மட்டும் மண்டியிடுகிறான். அங்கு மட்டும் அவனது ஆற்றல் தகர்க்கப்படுகிறது. அவனை எவ்வளவு வேண்டு மானாலும் ஆட்டிப்படைக்கும் வன்மையை அது பெற்றிருக் கிறது. மனிதப் பறவையின் சிறகை ஒடிக்கும் அத்தகு ஆற்றல் வாய்ந்த அந்தப் பொருள் எது தெரியுமா? அதுதான் உண்டி.

உண்டிக்கு மூலமானவை நிலனும் நீரும் என்பதை முன்னரே விளக்கினோம். நீர் பெருகுவதற்கான முயற்சிகளை யும் அத்துறையில் ஏற்பட்ட வெற்றிகளையும் தெளிவாகக் கண்டோம். மிகவும் இன்றியமையாத உழவுத் துறையில் ஏற்பட்டுள்ள வளர்ச்சிகளை இனிக் காணுவோம்.

**உழவின் சிறப்பு**—'கடவுள் இருப்பது கலப்பையின் முனையிலே' என்று, எங்கோ ஒரு தொடர் ஒரு பாட்டிலே வருகிறது. இத்தொடர் 'சுழன்றும் ஏர்ப்பின்னதே உலகம்' என்ற திருவள்ளுவர் வாக்கின் ஆழத்தை மிகத் தெளிவுறக் காட்டுகிறது. உலக வாழ்வே கலப்பையைச் சுற்றித்தான் இன்னும் சுழல்கிறது. மரமிருந்த இடத்திலே இரும்பும், மாடிருந்த இடத்திலே யந்திரமும் இன்று மாறியமைந்திருக்க லாம். ஆனாலும், அடிப்படையில் நடப்பது வேளாண்மை தானே?

**முதல் உழவன்**—மனிதன் வேளாண்மையை என்று கற்றான் என்று அறுதியிட்டுக் கூறுவார் ஒருவருமில்லை. ஆனால், நாம் இங்கு அறியவேண்டிய உண்மை ஒன்றுண்டு. சர். ஜான் மார்ஷல் போன்ற சில வரலாற்று வல்லுநர்கள், உழவுத் தொழிலை முதலில் ஒழுங்குபடுத்திய பெருமையை நமக்குத்தான் தந்திருக்கிறார்கள். இன்றும் உழவினையே

சிறப்பாகக் கொண்டிருக்கும் நாம்தான், முதன் முதலில் வேளாண்மையையே உலகுக்கு ஒழுங்குபடுத்திக் கொடுத்தோம் என்ற எண்ணம் நமக்கு மட்டற்ற மகிழ்ச்சியைத் தருகிறது அல்லவா ? எனினும் நம்மை வறுமை வாட்டியது. மேனாட்டார் ஆட்சி அந்த நிலைக்கு நம்மை ஆளாக்கிவிட்டது. உரிமை பெற்ற காலத்தில் நம்மை எதிர்நோக்கியிருந்த பெருங் கேடு இதுதான்.

**தளரவில்லை நெஞ்சம்**—விடுதலை அரசாங்கம் இதனால் தன் ஊக்கத்தை இழந்துவிடவில்லை. நீர்த்தேக்கம், புதிய வகையில் பயிரிடுதல், பொறுக்கு விதைகளைப் பயன்படுத்துதல் முதலிய செயல்கள் விரைந்து மேற்கொள்ளப்பட்டன. மக்களுக்குப் புதிய கருவிகள், புதிய முறை இவற்றால் உண்டாகும் பயன் பலவாறு எடுத்து விளக்கப்பட்டது. பொருட் காட்சிகளில் படம் போட்டு விளக்கியதோடு, ஊர் ஊராகவுள்ள உழவர்களோடு தொடர்பு கொண்டு நேரிலும் செய்து காட்டப்பட்டது. அரசாங்கம் அவர்களுக்கு வேண்டிய கடனுதவி செய்து அவர்களை ஊக்குவித்தது. ரஸாயன எருவின் பயனைப் பரப்பியதோடு பலவித ஆராய்ச்சிப் பண்ணைகளையும் மாதிரிப் பண்ணைகளையும் அமைத்தது. பொறுக்கு விதை, கலப்புச் சேர்க்கை, தழையுரம் முதலியவை பற்றிய பல பயனுள்ள ஆராய்ச்சிகள் இதுவரையில் நடந்திருக்கின்றன.

**உழவு**—மதுரை மாவட்டத்தில் சென்ற ஐந்தாண்டுகளில் பல செயல்கள் மேற்கொள்ளப்பட்டு நிறைவேற்றப்பட்டுள்ளன. புறம்போக்கு நிலத்தைக் கூடியமட்டும் பயிரிடத்தக்கதாகப் பண்படுத்தி உதவியிருக்கின்றனர். யந்திரக் கலப்பைகள், புல்டோசர் முதலியவை அதற்குப் பயன்படுத்தப்பட்டன. இம் மாதிரி யந்திர வேலைகளைக் கவனிப்பதற்கென்றே ஒரு உதவிப் பொறி யியக்குநர் (Engineer) மதுரைக்கு நியமிக்கப்பட்டார்.



பொட்டல்வெளி பொன்கொழிக்கும் புலமாகிறது

மேலும் 492 இரும்புக் கலப்பைகளும் பிற உழவுக் கருவிகளும் உழவருக்கு வழங்கப்பட்டன. இக்கருவிகளை வாங்குவதற்குக் கடனுதவியும் செய்யப்பட்டது.

எரு—பசுந்தழை உரத்தின் பயன் மக்களுக்கு நன்கு உணர்த்தப்பட்டது. 113 டன் விதை, பசுந்தழை உற்பத்திக்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. சிறப்பாகச் செஸ்பேனியா என்னும் சீமை அகத்திச் செடியின் மீது கவனம் செலுத்தப் பட்டது. வரப்புகளில் இச் செடியை நடுவதால் உழவரின் தேவை ஓரளவு பூர்த்தியாகும். தக்கைப் பூண்டைப் பயன் படுத்திக் களர் நிலத்தைப் புதுப்பிக்கலாம். இவ்வாறு பல பகுதிகள் புதுப்பிக்கப்பட்டுள்ளன. மணற்பாங்கான நிலத்தை



நன்னிகரற்ற தழையுரம்.

வளப்படுத்த கொளுஞ்சி மிகவும் பயனுள்ளது என்ற ஆராய்ச்சி உண்மை, உழவரிடையே நன்கு விளம்பரம் செய்யப் பட்டது.

வீட்டு வாசலின் ஒரு முனையிலோ, தோட்டத்தில் ஓரிடத் திலோ வெறுமனே குவிக்கப்பட்டிருக்கும் குப்பைக் குவியல் களை இன்றும் நாட்டுப் புறத்தில் காணலாம். அக்குப்பை யிலே குண்டுமணி மட்டுமல்ல, வைரமணியும் பெற முடியும். மக்களின் அறியாமை காரணமாக அந்த அரிய எருவின் முழுப்பயனையும் அவர்கள் பெறுவதில்லை. அவற்றை நல்ல எருவாக்கிப் பயன்படுத்துவதற்கேற்ற வழி வகைகளை எடுத்துக் காட்டியதோடு, போட்டிகள் மூலம் அவர்களை ஊக்கியும் வந்ததன் பயனாக, கடந்த ஐந்தாண்டுகளில் 68,636 டன் உயர்தர எரு உற்பத்தியாகியுள்ளது. தொழு உரத்தை நல்ல

முறையில் மக்கச் செய்ய 207,982 எருக்குழிகள் தோண்டப் பட்டன. 20,324 டன் அம்மோனியம் ஸல்பேட்டும், 1,992 டன் ஸூப்பர் பாஸ்பேட்டும் உழவருக்கு அளிக்கப்பட்டுள்ளன. அதிக அளவில் உரமிடும் பொருட்டு 26,97,472 ரூபாய் உழவருக்குக் கடனாகத் தந்துதவப்பட்டது. ரஸாயன எருவால் பயனுண்டு என்பதை மெய்ப்பித்துக் காட்டுவதற்கு, மத்திய அரசின் துணையுடன் 679 இடங்களில் சோதனைகள் நடத்திக் காட்டப்பட்டன.

**விதை**—எரு, மண், நீர் யாவற்றிற்கும் மேலாகப் பயிரின் வளர்ச்சிக்கு வேண்டப்படுவது ஒன்றுண்டு. அதுதான் நல்ல விதை. நல்ல விதைகளின் பயன் நம் குடியானவர் அறியாத ஒன்றல்ல. ஒவ்வோராண்டும் விதைக்கெனத் தனியே நல்ல சத்துள்ள வகையாக எடுத்துவைத்துப் பாதுகாக்கும் வழக்கம் என்று தோன்றியதென்றே நமக்குத் தெரியவில்லை. உழவுத் தொழில் தோன்றியவுடனே, உழவன் பெற்ற முதல் அனுபவங்களுள் ஒன்றாக இது இருக்கவேண்டும். ஆனால் புதிய முறையில் விதைகளைப் பக்குவப்படுத்தவோ, கிருமிகள் தாக்காதவாறு அவைகளுக்கு மருத்துவம் செய்துவைக்கவோ, கலப்புச் சேர்க்கையின் மூலம் வளம் மிக்க விதைகளை உண்டாக்கவோ, அவனுக்குத் தெரியாது. அதைத்தான் நம் வேளாண்மைத் துறை செய்தது.

இந்த மாவட்டத்தில் சென்ற ஐந்து ஆண்டுகளில் பயன் படுத்தப்பட்ட பொறுக்கு விதை பற்றிய விவரத்தையும், அதனால் விளைந்த பயன்களையும் சுருக்கமாகக் காணுவோம்.

விதைக்காகத் தரப்பட்ட பொறுக்கு நெல் 2,535 டன்னும் 1,063 பவுண்டுமாகும். 141,934 ஏக்கர் பரப்புள்ள வயல்களில் தூவப்பட்ட இந்த நெல், விளைச்சலைக் குறிப்பிடத்தக்க அளவு அதிகமாக்கியது. கூடுதலாகக் கிடைத்துள்ள விளைச்சல்



குலுங்கும் கதிர்கள்.

7,097 டன்களாகும். இம் மாவட்டத்திலுள்ள கழனிப் பரப்பில் பாதிக்குமேல், பொறுக்கு விதையினால் பயன் நல்கியவை என்பது குறிப்பிடத்தக்கது. வேளாண்மைத் துறையின் ஊக்கமான உழைப்பும், அரசாங்கம் உழவுக்குக் கொடுத்துவரும் சிறப்புமே இதற்குரிய காரணங்களாகும்..

சோளம், கம்பு, கேழ்வரகு, நிலக்கடலை, ஆமணக்கு, பருத்தி ஆகிய பயிர்களிலும் பொறுக்கு விதையைப் பயன்படுத்தி விளைச்சல் மிகுக்கப்பட்டுள்ளது.

8,052 ஏக்கர் பரப்புள்ள நிலத்தில் சுமார் 53 டன் 1,558 பவுண்டு பொறுக்குச் சோளம் விதைக்கப்பட்டது. இதனால் 535 டன் சோளம் கூடுதலாக விளைந்துள்ளது.

இவ்வாறே 685 ஏக்கருக்கு கம்பு பயிரிடப்பட்டது. இதில் பயன் படுத்தப்பட்ட உயர்தர வித்தின் அளவு 10 டன் 1,83) பவுண்டு. இதன் மூலம் கூடுதலாகிய விளைச்சல் 45 டன் 1,800 பவுண் டாகும்.

6 டன் 795 பவுண்டு உயர்தர ராகி, 408 ஏக்கருக்குப் பயன் பட்டது. கூடுதலாகக் கிடைத்த விளைச்சல் 27 ன்.

968 ஏகரில் இவ்வாறே நிலக்கடலை விளைவிக்கப்பட்டது. பொறுக்கு வித்தின் அளவு 32 டன் 616 பவுண்டு. இப் பொறுக்கு கடலையால்தான் 97 டன் கூடுதலாக விளைச்சலில் பெறமுடிந்தது.

511 ஏக்கரில் 11 டன் ஆமணக்கு கூடுதலாக விளைந்தது. இதற்குப் பயன்படுத்தப்பட்ட விதையின் அளவு 1 டன் 316 பவுண்டு.

1,141 டன் 1,129 பவுண்டு உயர்தரப் பொறுக்குப் பருத்திக் கொட்டையை வித்தாக இட்டதன் விளைவாக 8,561 டன் பருத்தியைக் கூடுதலாகப்பெற முடிந்தது. இதற்கான விளைச்சல் நிலப்பரப்பு 171,225 ஏக்கராகும்.

மேலும் கடந்த ஐந்தாண்டுகளில் மதுரை மாவட்டத்தில் 12,772 தென்னங்கன்றுகள் உழவருக்கு அளிக்கப்பட்டிருக் கின்றன.

**பழவகைகள்-காய்கறிகள்**—பழவகைகளும் காய்கறிகளும், உணவுத் தெம்பு (போஷாக்கு) பெற இன்றியமையாது வேண் டியவை. உடலுக்கு நன்மை பயப்பதோடல்லாமல் அரிசி



'நகைப்பதேன் கொடி முந்திரி ?'

யையே நம்பி அல்லலுறும் நம் நிலையைப் போக்கவும் ஓரளவு இவை துணைபுரிகின்றன. எனவேதான் ஐந்தாண்டுத் திட்டத்தில் இவற்றில் போதிய கவனம் செலுத்தப்பட்டது.

ஆராய்ச்சிப் பண்ணைகளிலிருந்தும், பிற இடங்களிலிருந்தும், 167,481 பல்வேறு பழச் செடிகளை (மா, பலா, ஆரஞ்சு, கொடி முந்திரி, எலுமிச்சை முதலியவை) இம் மாவட்டத் திற்குத் தருவித்துப் பயிரிட்டனர். கோடைக்கானலில் உயர்ந்த வகை உருளைக்கிழங்கு பயிரிடப்பட்டுள்ளது.

**பலவகை ஆராய்ச்சிகள்**—'இந்திய நாட்டு மக்கள் மூடநம்பிக்கை மிக்கவர்கள், எதையும் எளிதில் நம்பி ஏமாறுபவர்கள்' என்று நம் நாட்டைப் பற்றிப் பலர் கூறக் கேட்டிருக்

கலாம். பிற நாட்டார் கருதுவது ஒரு புற மிருக்க, நம் நகரமாந்தரே நாட்டுப்புறத்தில் உள்ளவர்களைப்பற்றி அப்படித் தான் நினைக்கின்றனர். ஆனால் நாட்டுப் புறத்திற்குப் போய்ப்பார்த்தால் உண்மை விளங்கும்.

ஏதாவது புதிதாக ஒன்றை—அவனிடம் இல்லாத ஒன்றை— கூறியவுடனேயே எந்த நாட்டுப்புறத்தானும் அதை ஏற்றுக் கொள்ள மாட்டான். எதையும் மெய்ப்பித்துக் காட்டினால் தான் அவர்களை நம்பவைக்க முடியும். வெறுமனே எவ்வளவு கூறினாலும் கூறுவோருக்கு வாய்வலிதான் மிஞ்சும். இதனை நன்கு உணர்ந்தே, நம் வேளாண்மைத் துறையில் மாதிரித் தோட்டங்கள், பண்ணைகள் ஆகியவை அமைப்பதிலே அதிக கவனம் செலுத்தப்படுகிறது.

மதுரை மாவட்டத்திலுள்ள காமாட்சி புறத்தில் ஒரு மாதிரிப் பழத்தோட்டம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இவ்வூர் பெரியகுளம் வட்டத்தில் உள்ளது. இதே வட்டத்திலுள்ள காமயகவுண்டன்பட்டி, கங்குவார்பட்டி ஆகிய ஊர்களிலிருந்து பிற மாவட்டங்களுக்கு கொடிமுந்திரிப் பழங்கள் ஏராளமாக அனுப்பப்படுகின்றன.

சென்ற ஐந்து ஆண்டுகளில் 17 டன் உயர்ந்த காய்கறி விதைகள் உழவருக்கு அளிக்கப்பட்டுள்ளன.

கீழ்ப்பழனியில் மிளகு உற்பத்தி தொடங்கப்பட்டுள்ளது. பயிரைப் பாதுகாக்கும் முயற்சிகள் யாவும் குறைவின்றி எடுக்கப்பட்டு வருகின்றன.

கரும்பு பயிரிடும் முறை குறித்துப் பலமுறை பலவிடங்களில் உழவருக்கு எடுத்து விளக்கப்பட்டுள்ளது. சுமார் 1,856 இடங்களில் இவ்வேலை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. கரும்பு வயல்களில் ரஸாயன உரம்போடுவதற்காக வேளாண் மக்களுக்கு 22,000 ரூபாய் கடனாக வழங்கப்பட்டது.

பயிரிடும் முறை—பருவமறிந்து, மண்ணின் தன்மை தெரிந்து, பக்குவமுடன் பயிரிடுவதைத் தமிழ்நாட்டு உழவர் பன்னெடுங்காலமாக மேற்கொண்டிருக்கின்றனர். அம் முறைகள் சிறந்தனவே என்றாலும், புதியதாகக் கையாளப் படும் ஜப்பானிய நடவு முறைகள் அதைக்காட்டிலும் சிறந்தன வாகத் தோன்றுகின்றன. நெல் பயிரில் மட்டுமல்லாது, கரும்பு முதலிய பிற பயிர் வகைகளிலும் இம்முறையால் நல்ல பயன் காணப்பட்டது.

ஜப்பானிய முறைகள், இயன்றமட்டும் உழவருக்கு எடுத்து இயம்பப்படுகிறது. 2,371 இடங்களில் ஜப்பானிய முறையில் பயிர் செய்து, அதனால் விளையும் பயன், மக்களுக்குக் கண்முன் காட்டப்பட்டது. இவ்வாறு சலியாமல் உழைத்ததன் பயனாக

ஜப்பானிய முறையிலே சாகுபடி.



முதல் திட்டகால முடிவிற்குள், மதுரை மாவட்டத்தில் சுமார் 20,000 ஏக்கரில் இப்புதியமுறை காலகொண்டு விட்டது.

இப் புதிய முறையைக் கையாண்டதனுல்தான் இந்த மாவட்டத்தைச் சேர்ந்த மார்க்கயம் கோட்டை உழவர் திரு சேது ராவ் அவர்கள், நம் மாநில முதற்பரிசையே பெறமுடிந்தது.

உழவு சம்பந்தமான அறிஞர்களின் ஆராய்ச்சி அனுபவங்களை உழவருக்குக் கொண்டு சேர்க்க 'மேழிச்செல்வம்' நன்கு பயன்படுகிறது. அதற்கு இந்த மாவட்டத்தில் நிறையச் சந்தாதார்கள் உள்ளனர்.

புதிய பயிரிடும் முறைகளைப் பயன்படுத்திய காரணத்தால் நெல், சோளம், ராகி, கம்பு, பருத்தி, கரும்பு ஆகியவற்றின் விளைச்சல் அதிகரித்தது. புதிய முறையும் மிக விரைவாக நிலங்களில் பரவியது. உழவர் அதனை மிகவும் வரவேற்கின்றனர். புதிய முறைகளைக் கையாண்ட நிலப்பரப்பு திட்டகாலத்தின் தொடக்கத்தில் இருந்ததைக் காட்டிலும் திட்டகால இறுதியில் அதிகரித்திருக்கிறது. புதிய முறையில் 1951-ல் பயிரிடப்பட்ட நிலமும் 1954–55-ல் பயிரிடப்பட்ட நிலப்பரப்பும் கீழே தரப்படுகின்றன :—

| | புதுமுறை விளை நிலம் | |
|---|---|---|
| | 1950-51 | 1954-55 |
| | ஏக்கர் | ஏக்கர் |
| நெல் .. .. | 76,631 | 85,206 |
| சோளம் .. .. | 8,739 | 77,278 |
| ராகி .. .. | 3,775 | 18,264 |
| கம்பு .. .. | 2,601 | 5,134 |
| பருத்தி .. .. | 34,606 | 120,000 |
| கரும்பு .. .. | 696 | விளை நிலம் முழுதும். |

மதுரை மாவட்டத்தில் இன்று கரும்பு பயிரிடும் இடமெல்லாம், புதிய முறையே கையாளப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

வாடிப்பட்டிக்கு அருகாமையில் உள்ள பாண்டியராஜபுரத்தில் அமைக்கப்பட்ட சர்க்கரையாலை, உற்பத்தியைப் பெருக்கியுள்ளது. அது பற்றிய எல்லாவற்றையும் பார்த்துக் கொள்ள ஒரு தனி அலுவலர் (officer) நியமிக்கப்பட்டிருக்கிறார்.

**போட்டி மனப்பான்மை**—ஒரு தொழில் சிறப்புறுவதற்குப் போட்டி மனப்பான்மை மிகவும் பயன்படுகிறது. கல்வி கற்கும் மாணவனுக்குக்கூட போட்டி மனப்பான்மை மிகவும் வேண்டும், ஆனால் பொறாமை கூடாது என்று சொல்வதுண்டு.

நெல், கரும்பு, நிலக்கடலை முதலிய பயிரினங்களில் உழவரிடையே விளைச்சல் போட்டி ஏற்படுத்தப்பட்டது. இதில் பலர் ஆர்வமுடன் கலந்து கொண்டனர். சென்ற ஐந்தாண்டுகளிலும் 3,975 உழவர்கள் இப் போட்டியில் பங்கு கொண்டுள்ளனர்.

**உழவன் சிறக்க**—உழவு சிறக்கவேண்டுமாயின் முதலில் உழவன் சிறக்கவேண்டும். அவன் வாழ்வு பல்வளமும் பெற்றுப் பெருகவேண்டும். மதுரை, மேலூர், நிலக்கோட்டை, ஆத்தூர் ஆகிய பகுதிகளிலுள்ள தேசீய வளர்ச்சிப்பணி, சமுதாய நலத்திட்டம் ஆகிய அமைப்புகள் இத்துறையில் நல்ல பணியாற்றி வருகின்றன.

ஒழிவு நேரத்தை இன்னும் நமது உழவர் பலர் வீணாக்கி வருகின்றனர். அதனைப் பலனுள்ள வகையில் செலவிட்டால், அவர் வாழ்வு வளம்பெற அது பெருந்துணை புரியும். இதற்கான முயற்சியிலும் நம் வேளாண்மைத் துறை தலைப்பட்டது. மதுரை மாவட்டத்தில் 1,000 தேன் கூடுகள் அமைக்கப்பட்டு அவை யாவும் உழவருக்கே உடைமையாகவிருக்கின்றன.

வடிமுனைக் குழாய்

ஒத்துழைப்பு—மேட்டிலே இருப்பவன் எத்தனைதான் முயன்றாலும் பாழ்கிணற்றிலே கிடப்பவனை வெளியே கொணர்ந்து விட முடியாது. உள்ளே கிடப்பவன் கொஞ்ச மாவது முயற்சி யெடுக்காவிட்டால் ஒன்றுமே நடக்காது. மேலேயிருந்து விடப்படும் கயிற்றைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளும் திறமையாவது கீழிருப்பவனுக்கு இருக்க வேண்டாமா? நம் உழவர் நிலையும் இப்படிப்பட்டதே. அவர்கள் கடைத்தேறுவதற்கு அரசாங்கம் மட்டும் தலைகீழாக நின்றாலும் போதாது. உழவர்களுக்குத் தன்னம்பிக்கையும் தங்களைப்பற்றிய அறிவும் முதலில் ஏற்பட்டாக வேண்டும். இதை மனதில் கொண்டுதான், உழவர் கழகங்கள் அமைக்கப் படுகின்றன. சென்ற ஐந்து ஆண்டுகளில் இந்த மாவட்டத்தில் 1,862 ஊர்களில், உழவர் கழகங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

MADU.—5A

புதிய உழவு முறைகளைப் பரப்புவதற்கு இவை நன்கு பயன் படுகின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இக் கழகங்களின்மீது மேலும் கவனம் செலுத்தப்படும். தம் ஊர் தொடர்பான யாவற்றையும் தாமே பார்த்துக் கொள் ளும் செல்வாக்கை, இக்கழகங்கள் பெறும். அப்பொழுது, நாட்டுப்புறத்தில் ஆங்காங்குள்ள இந்தச் சங்கங்களே நாட்டின் உயிர் நாடியாக விளங்கும்.

## கால்நடை வளர்ச்சி

**அடிப்படைக்கும் அடிப்படை**—நிலத்தின் வளம் எருப்போடு வதில் மட்டும் அடங்கி விடுவதில்லை. பயிரின் செழிப்பு விதை ஒன்றிலேயே ஒடுங்கி விடுவதுமில்லை. அதற்கு நீர் வேண்டும்; காற்று வேண்டும்; யாவற்றிற்கும் மேலாக இவை அனைத்தும் விதைக்குப் பயன்படத்தக்க வகையில் நல்ல உழவு வேண்டும். உழவே அனைத்திற்கும் அடிப்படை. அதனால்தான் போலும் வள்ளுவர், பயிரிடுவார் உலகத்திற்கு ஆணி என்று சொல்லாமல் உழுவார் உலகத்திற்கு ஆணி என்று உழவைக் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கின்றனர். 'ஏர்ப்பினனது உலகம்' என்ற தொடரும் இதனையே வலியுறுத்துகிறது. எங்கும் உழவுக்கே சிறப்பு தரப்படுகிறது. காரணம், அதுவே வேளாண்மைக்கு அடிப்படை. ஆனால் இந்த அடிப்படைக்கு அடிப்படை, மாடு களே அல்லவா?

கால்நடைக்கு எங்கும், எந்தக் காலத்திலும், பெருஞ் சிறப்பு இருந்து வந்திருக்கிறது. பயிர்த் தொழிலையறியாத பண்டைய மக்கள், முதலில் கால் நடைகளை மேய்த்துத்தான் வாழ்வைக் கடத்தினர். இந்திய நாட்டுக்கு வந்த ஆரியர், மேய்ச்சல் நிலத் தைத் தேடி வந்ததாகத் தானே வரலாறு கூறுகின்றது?

பழந்தமிழ் இலக்கியத்தில், கால்நடைக்கு, மூவினம் என்று பெயர். முல்லை நிலத்திலே வாழ்ந்த இடைக்குல மக்களின் சிறப்பான தொழில் மூவினம் மேய்த்தலே.

நாடு விடுதலை அடைவதற்கு முன்னர் மதுரை இராமனாத புரம் இரு மாவட்டங்களுக்கும், ஒரு கால்நடை அலுவலர்தான் இருந்தார். அந்த அளவுக்குக் கால்நடையின் வளர்ச்சியிலே ஆங்கிலேயர் அக்கறை காட்டி வந்தனர்! உலகப் போருக்குப் பின்னர் எடுத்துக் கொள்ளப்பட்ட, வளர்ச்சிப் பணிகளில் இந்தப்பகுதியும் சேர்ந்தது. எனவே இரண்டும் ஒன்றாக இருந்த நிலை மாறித் தனித்தனியே பிரிக்கப்பட்டன.

1954-ல் கம்பம், சோழவந்தான் ஆகிய இரண்டு இடங்களி லும் இரு மருத்துவசாலைகள் இருந்தன. 6,324 கால்நடை களுக்கு மருத்துவமும், 1,314-க்குக் காயடித்தலும், 7,768-க்கு ஊசி போடுதலும், இங்கு நடந்தேறியிருக்கின்ற பணிகளாகும்.

திண்டுக்கல், நத்தம், பண்ணைக்காடு ஆகிய மூன்றிடங் களிலும் மூன்று நடமாடும் அமைப்புகள் இருந்தன. அவற் றில் ஊசிபோடப்பட்டவை 61,879; மருத்துவம் செய்யப் பட்டவை 4,395; காயடிக்கப்பட்டவை 541.

மருத்துவ ஆராய்ச்சியும் இங்கு செய்யப்படுகிறது. மதுரை மருத்துவசாலையில், ஆய்வுக்களம் ஒன்று, இதற்கென நிறுவப் பட்டுள்ளது. 1956-ம் ஆண்டு ஜனவரி மீ 5உ-ல் திறக்கப்பட்ட அது, சுமார் மூன்று மாதங்களில் 574 கால்நடைகளைச் சோதித்து உள்ளது.

ஐந்தாண்டுத் திட்டகாலத்தின் தொடக்கத்தில் இந்த மாவட்டத்தில் ஒன்பது இடங்களில் பெரிய கால்நடை மருத்துவ சாலைகளும், ஐந்து இடங்களில் சிறிய கால்நடை மருத்துவ சாலைகளும் இருந்தன. நடமாடும் அமைப் பொன்றும் பெரியகுளத்திலே இருந்தது. இவற்றில் கால்நடை உதவி மருத்துவர் 16 பேர், கம்பவுண்டர் 3 பேர், மருந்து கண்காணிப்போர் 4 பேர் ஆக 23 பேர் வேலை செய்து வந்தனர்.

உழவையே சிறப்பாகக் கொண்ட நம் நாடு, கால்நடையையே பலவற்றிற்கும் பெரிதும் நம்பி வாழவேண்டியிருக்கிறது.

இந்நிலையில் அவற்றை நல்லபடியே போற்றிக் காவாது போனால் உழவன்கதி என்னவது ?

அசோகன் சக்கரத்தைக் கொடியிலே பொறித்த நம் மக்க ளாட்சி, உண்மை அசோகனை எப்படி மறக்கமுடியும் ?

நாடெங்கும் மருத்துவ சாலைகள் எண்ணற்றன உடனே நிறுவப்படவேண்டுமென அரசாங்கம் நினைத்தது. அன்றே செயலிலும் இறங்கியது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் இம்மாவட்டத்தில், இத்துறையில் ஏற்பட்ட முன்னேற்றம், மிக விரைவானதாகும்.

தல்லாகுளம், பெரியகுளம் ஆகிய இடங்களிலுள்ள கோழிப் பண்ணைகளோடு, கோடைக்கானலில் மற்றொரு கோழிப் பண்ணையும் நிறுவப்பட்டது. கல்லுப்பட்டியிலுள்ள தமிழ்நாடு கிராமசேவகர் வித்யாலயத்தில், சிவப்புச் சீமைக் கோழிப் பண்ணை ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

சமுதாய நலத்திட்டத்தின் கீழ் நீலக்கோட்டை வட்டாரத்தில் வாடிப்பட்டியில் ஒரு கால்நடை நிலையமும், அலங்காநல்லூரில் ஓர் உதவிக் கால்நடை நிலையமும் நிறுவப்பட்டன. மருத்துவர் ஒருவரும், இரண்டு கால்நடை இன்ஸ்பெக்டரும் இவ்விடங்களில் நியமிக்கப்பட்டனர். 1953-ல் இடையக் கோட்டையிலும் நெய் வேலியிலும் முறையே கால்நடை நிலை யங்கள் நிறுவப்பட்டன. செயற்கையாக கருத்தரிக்கச் செய்யும் முறைகள் அங்கு பின்பற்றப்படுகின்றன. மேலூரி லுள்ள கால்நடை நிலையம், சமுதாய நலத்திட்டத்தில் சேர்க்கப்பட்டுவிட்டது. மதுரையில் நடமாடும் நிலையம் ஒன்று திறக்கப்பட்டுள்ளது. மதுரை, மேலூர் வட்டங்கள் இதனால் நலம்பெறும்.

கால்நடை வளர்ச்சி நிலையங்கள் நிறுவப்பட்டதை யொட்டி, பழனிவட்டத்தில், 1953-ம் ஆண்டு ஏப்ரல் மீ 10உ-லிருந்து மூன் றாண்டுகள், கால்நடை வளர்ச்சிச் சட்டம் அமுலில் இருந்தது.

தேசிய வளர்ச்சித் திட்டம் 1953-ம் வருடம் அக்டோபர் மீ 2உ யில் திருமங்கலம் கல்லுப்பட்டி வட்டாரங்களில் வேலைசெய்யத் தொடங்கியதன் விளைவாக, இரு வட்டாரத்திலும் இரு கால் நடை மருத்துவர் நியமிக்கப்பட்டுள்ளனர். திருமங்கலம், உசிலம்பட்டியிலுள்ள கால்நடை இலாகாவின் வசமே இன்னுமுள்ளது.

உள்ளூர் வளர்ச்சித் திட்டத்தின்கீழ்த் தல்லாகுளம் மருத்துவசாலையில், செயற்கை முறைக் கால்நடை வளர்ச்சி நிலையத்துக்கான கட்டிடம் ஒன்று 5,600 ரூபாய் செலவில் கட்டப்பட்டது. செலவில் பாதியை அருட்கழகம் (ஜீவகாருண்ய சங்கம்) அளித்துள்ளது.

இடையக்கோட்டை, நெய்க்காரப்பட்டியிலுள்ள கால்நடை வளர்ச்சி நிலையங்கள். 1954-ம் வருடம் மார்ச்சு மீ 1உ முதல், சென்னை, கால்நடை செயற்கை வளர்ப்பு முறைத் தனி அதிகாரி இலாகாவுக்கு மாற்றப்பட்டன. 1954-ல் புதிதாக இரு கால் நடை மருத்துவ விடுதிகள் கம்பத்திலும், சோழவந்தானிலும் அமைக்கப்பட்டன. சோழவந்தான் மருத்துவ சாலையின் ஆண்டுச் செலவில், நூற்றுக்கு 25 பாகத்தை அவ்வூர் மன்றமும், மதுரை மாவட்ட ஆட்சி மன்றமும் ஏற்றுக்கொண்டிருக்கின்றன.

கம்பத்திலுள்ள ஊர் மன்றத்தார் மருத்துவ சாலைக்கென ஆண்டிற்கு 1,000 ரூபாய் மேனியில் உதவியிருக்கிறார்கள். முன்பே அங்கிருந்த சிறிய கால்நடை மருத்துவ சாலை சின்ன மனூருக்கு பெயர்க்கப்பட்டது. சின்னமனூர் மன்றத்தார் ஒவ்வொராண்டும் 750 ரூபாயை இதற்கு உதவுகின்றனர்.

தாமரைத்துப்பட்டியிலுள்ள கால்நடை மருத்துவசாலை சமுதாய நலத்திட்ட அதிகாரிகளிடம் ஒப்புவிக்கப்பட்டது.

திண்டுக்கல்லைத் தலைமையிடமாகக் கொண்ட நடமாடும் விடுதியொன்று 1954-ல் அங்கு நிறுவப்பட்டுள்ளது. அது பின்னர் வேடச்சந்தூருக்கு மாற்றப்பட்டது.

ஆத்தூரிலும், திருமலைராயபுரத்திலும் முறையே இரு கால் நடை முதலுதவி நிலையங்கள் நிறுவப்பட்டன.

கால்நடைத் தொத்து வியாதிகளைக் கண்டு பிடிக்க ஆராய்ச்சி நிலையமொன்று, மதுரையில் இப்பொழுது வேலைசெய்து வருகிறது. இதில் சென்ற ஆண்டு 575 மாடுகளின் இரத்தம் சோதிக்கப்பட்டது. இதற்கு ஆகிய செலவு ரூ. 1,325–12–0. தல்லாகுளத்தில் நடந்துகொண்டிருக்கும் கட்டிட வேலைகள் முடிவுற்றதும், இது அங்கு மாற்றப்படும்.

பெரியகுளத்தின் நடமாடும் நிலையம் 1956-ம் ஆண்டு ஜூன் மீ 10உ-ல் அவ்விநகரத்திற்கு மாற்றப்பட்டது.

சமுதாய நலத்திட்டத்தின்கீழ் மேலூர், பள்ளப்பட்டி கால் நடை மருத்துவ சாலைகள் தவிர, மதுரைக்கோட்டத்திலுள்ள சத்திரப்பட்டியில் புதிதாக 1955-ம் ஆண்டு நவம்பர் மீ 20உ-ல் மற்றொன்று நிறுவப்பட்டது. பள்ளப்பட்டி மருத்துவ சாலையிலும், அலங்காநல்லூர் வாடிப்பட்டி முதலுதவி நிலையங்களிலும், மூன்று கோழிப் பண்ணைகள் நிறுவப்பட்டிருக்கின்றன. இவைகளிலிருந்து 1955–56-ஆம் ஆண்டில் 1,295 முட்டைகள் கிடைத்தன. 213 அடைவைக்கப்பட்டன; எஞ்சியவை விற்கப்பட்டன.

தருமப்பட்டி கால்நடை மருத்துவ விடுதிக்குப் புதுக் கட்டிடம் கட்டப்பட்டது. முன்பு இது வாடகை வீட்டில் இருந்து வந்தது. செயற்கை முறைக் கால்நடை வளர்ப்பு நிலையமொன்றும், விரைவில் அங்கு வேலை செய்யும்.

முப்பத்தி எழு ஜாதிச் சேவல்கள், பொறுக்கி யெடுக்கப்பட்ட மூன்று ஊர்களில் வாரத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ளன.

1955–56-ல் சென்னைக் கால்நடைத் துறையின் கீழ், இந்த மாவட்டத்தில் இருப்பவை :

10 பெரிய கால் நடை மருத்துவச் சாலைகள்.

7 சிறிய கால்நடை மருத்துவச் சாலைகள்.

2 நடமாடும் சாலைகள்.

பெரியாறு சமுதாய நலத்திட்டத்தின் கீழ் மூன்றும், ஆத்தூர் வட்டாரத்தில் ஒன்றுமாக மேலும் நான்கு மருத்துவ சாலைகள் இம்மாவட்டத்தில் இருக்கின்றன.

உழவனின் கண்கண்ட தெய்வம்



தொத்து நோய்த்தடுப்பு, புதிய தீவன வகைகள், கோழிப் பண்ணை, கால்நடை வளர்ப்பு ஆகியவைபற்றிய பலசெய்திகள், மக்களுக்கு, கூட்டங்கள் போடுவதன் மூலமும் பொருட் காட்சிகள் மூலமும் அறிவுறுத்தப்படுகின்றன.

**சில புள்ளி விவரங்கள் :**

| ஆண்டு | மருத்துவம் | காயடிக்கப் பட்டவை |
|---|---|---|
| 1951-52 | 30,037 | 8,238 |
| 1952-53 | 29,382 | 7,591 |
| 1953-54 | 35,440 | 10,608 |
| 1954-55 | 53,167 | 14,081 |
| 1955 56 | 60,358 | 14,033 |

**தொத்து நோய் :**

| ஆண்டு | மருத்துவம் செய்யப் பட்டவை | தடுப்பு ஊசி போடப் பட்டவை |
|---|---|---|
| 1951-52 | 154 | 54,996 |
| 1952-53 | 121 | 56,936 |
| 1953-54 | 116 | 53,357 |
| 1954-55 | 201 | 1,00,917 |
| 1955-56 | 286 | 1,40,155 |

**மதுரை வேளாண்மைத் துறையிலுள்ள பொலிக் காளை... பற்றிய விவரம் :**

| ஆண்டு | பொலிக்காளைகள் | பலம்பட்ட மாடுகள் |
|---|---|---|
| 1951-52 | 11 | 733 |
| 1952-53 | 11 | 991 |
| 1953-54 | 14 | 1,248 |
| 1954-55 | 16 | 1,978 |
| 1955-56 | 13 | 3,097 |

காளைகளின் தன்மையைப் பொறுத்தே பசு ஈனுகின்ற கன்றுகளின் தன்மையும் இருக்கும். எனவேதான் பொலிக் காளைகளை வளர்த்து, மாடுகளைப் பலம்பட வைப்பதில் அரசாங்கம் அக்கறை காட்டுகின்றது.

**கால் நடைச் செல்வம்**—கால் நடைச் செல்வத்தை வளர்ப்பதற்காக எடுத்துக்கொண்ட முயற்சிகளைச் சுருக்கமாகக் காணுவோம்:

செயற்கை முறையில் மாடுகளைப் பலம்படச் செய்வதற்கான நிலையமொன்று மதுரையில் நிறுவப்பட்டது.

அகில இந்தியக் கால்நடைச்செல்வப் பாதுகாப்பின் கீழ், தொப்பம்பட்டி, இடையக்கோட்டை, நெய்க்காரப்பட்டி, ஆகிய இடங்களிலும் இத்தகைய நிலையங்கள் நிறுவப் பட்டுள்ளன.

இடையக் கோட்டையிலும் நெய்காரப்பட்டியிலும், 1953-ஆம் ஆண்டில் இவை நிறுவப்பட்டன. தொப்பம்பட்டி நிலையம், 1955-ஆம் ஆண்டில் அமைக்கப்பெற்றது.

| | தொப்பம் பட்டி | இடையக் கோட்டை | நெய்காரப் பட்டி |
|---|---|---|---|
| இயற்கையாகப் பலம் படுத் தப்பட்ட மாடுகள் .. | 397 | 309 | 471 |
| செமன் சேகரிக்கப் பட்டவை .. .. | 359 | 642 | 918 |
| செயற்கை முறையில் கருத் தரிக்குமாறு செய்யப்பட்டவை .. | 2,707 | 4,191 | 7,132 |

| | தொப்பம் பட்டி | இடையக் கோட்டை | நெய்காரப் பட்டி |
|---|---|---|---|
| பிறந்த கன்றுகளும் ஒப்பிட்டு ஆராயப் பட்டவையும் .. | 337 | 448 | 1,367 |
| ஊசிபோடப்பட்டவை. | 2,990 | 8,442 | 14,598 |

ஆடுகளைக் கழுவுவது, அதன் மயிரைச் சேகரிப்பது போன்றவைகளை மக்களுக்கு விளக்கிக் காட்டுவதற்காக மதுரையில் ஓர் அமைப்பு, வேலை செய்கிறது. இது மிக இன்றியமையாத ஒரு அமைப்பாகும். ஆடுகளைப் புழு நீக்கி, அடிக்கடி கழுவிச் சுத்தமாக வைத்து வளர்ப்பது மிகமிக அவசியம். ஓர் ஆடு நோய்வாய்ப்பட்டால் அது மந்தையிலுள்ள ஆடுகள் முழுமைக்கும் தீங்கு பயப்பதாகும். காட்டுத் தீ போல அப்பிணி விரைவில் ஏனையவற்றிற்கும் பரவும். உழவன் செய்வதறியாது திகைப்பான். பெரும் பண்ணைகளும்கூட சில போது இத்தகைய நிலையால் கடனில் ஆழ்ந்துவிடும் அவலநிலை ஏற்படலாம். எனவே உழவர் மிக விழிப்பாகத் தம் கால்நடைகளைப் பேணவேண்டும்.



" ஆயுதம் செய்வோம், நல்ல காகிதம் செய்வோம்,
ஆலைகள் வைப்போம், கல்விச் சாலைகள் வைப்போம்,
ஓயுதல் செய்யோம், தலைசாயுதல் செய்யோம்,
உண்மைகள் சொல்வோம், பல வண்மைகள் செய்வோம் "

—பாரதியார்.

# தொழில்... வளர!

மீன் பிடித்தல், வெல்லம் காய்ச்சுதல், காதி முதலிய சிறந்த தொழில்கள் மதுரை மாவட்டத்தில் குறிப்பிடத்தக்கனவாகும். இவற்றை வளர்ப்பதில் முதல் ஐந்தாண்டுத் திட்டம் பெற்ற வெற்றிகளை விளக்கமாகக் காணுவோம்.

தொழிலை வளர்ப்பதென்பதன் உண்மையான பொருள் தொழிளாலர் நலத்தை வளர்ப்பதே. தனது உழைப்புக்கேற்ற வருவாய் கிடைக்குமானால் உழைப்பாளி அத்தொழிலிலே மேலும் ஆழ்ந்த நோக்கம் செலுத்தி அதனைப் பின்னும் சிறப்புறச் செய்வான். அவன் வாழ்வு தொழிலால் வளம் பெறும் ; தொழில் அவன் வாழ்வால் சிறக்கும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் சிறப்பு இதில்தான் அடங்கியுள்ளது. எந்தத் தொழிலைச் செழிக்கச் செய்ய நினைத்தாலும், அதில் ஈடுபட்டுள்ளோர் வாழ்க்கையை ஆராய்வதையே அரசாங்கம் தனது முதல் கடமையாகக் கொண்டது. அதனாலேயே தொழில் துறையில் நாம் நன்கு முன்னேற முடிந்தது.



தொழில் வளருகிறது—தோளுக்கும் உறுதி !

## மீன் அளம் (Fisheries)

தண்புனல் பரந்த பூசல் மண்ணா மறுத்து மீனிற் செறுக்கும் யாணர்ப் பயன் திகழ் வைப்பில்....அகன்றலை நாடே.

—கருங்குழலாதனார்.

மனிதன் வேளாண்மையையே உணராத தொல் பழங்காலந் தொட்டு நாளது வரையில், அவனது உணவுப்பொருள்களுள், மீன் சிறப்பான ஒன்றாக இருந்து வருகின்றது எனலாம். அதிலும் சில நாடுகள் இன்றும் மீனையே நம்பித்தான் வாழ்வை நடத்துகின்றன. நம் பரத கண்டத்திற்கு அத் தகைய இக்கட்டு இல்லையெனினும் நமது பற்றாக்குறையைப் போக்குவதற்கு மீனுணவு பெருந்துணைபுரியும் என்பதற்கு

ஐயமில்லை. எனவே இத்துறையில் போதிய நோக்கம் செலுத்தப்பட வேண்டுவதன் தேவையை உணர்ந்து, இத் தொழிலை முன்னேற்றுவதற்கான பல முயற்சிகள், எல்லா மாவட்டங்களிலும் மேற்கொள்ளப்பட்டன.

சென்னை மாநிலத்தின் கடற்கரை நீளம் சுமார் எண்ணூறு மைல்களாகும். உள் நாட்டிலுள்ள நீர் நிலைகளின் பரப்பு நான்கு லட்சம் எக்கர். எனவே மீன் உணவைப் பெருக்குவதற்கு நமக்குள்ள வாய்ப்புகள் மிகுதி என்பது இங்கே நாம் நினைவு கொள்ளுதற்குரியது.

இதனை நம் அரசாங்கம் நன்கு பயன்படுத்திக்கொண்டது. மீனைப் பெருக்குவதற்கான முயற்சிகள் யாவும் மேற்கொள்ளப்பட்டன. கடிதில் இனப் பெருக்கம் செய்யவல்ல திலேபியா, கேஞ்சேஸ் போன்ற மீன் வகைகள் ஏராளமாக வளர்க்கப்பட்டு, அரசாங்கத்திற்குட்பட்ட நீர்நிலைகளிலும் தனிப்பட்டோருக்கு உரியவற்றிலும் பெருக்கப்பட்டன. பல நீர்நிலைகளை அரசாங்கம் தனதாக்கி, அங்கு, மீன்வளர்ப்பு பற்றிய புதிய முறைகளை மக்களுக்குக் கற்பித்தது. மேலும் மீன் பிடிக்கும் தொழிலை ஊக்குவிப்பதற்கான முயற்சிகள் யாவும் மேற்கொள்ளப்பட்டன.

மீனவர் சங்கங்களை உருவாக்கிப் பேணி வளர்த்ததனால், மீனவர் வாழ்வு வளம் பெற்றது. நீர்நிலைக்காரர்களுக்குத் தேவையான உதவியும் அறிவும் நல்கி, மீன் வளர்ப்பு ஊக்குவிக்கப்பட்டது. இவ்வாறு பலவகையிலும் மேற்கொள்ளப்பட்ட பணிகளுக்காக, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் இத் துறைக்கு 49 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது. இரண்டாவது திட்டத்தில் சுமார் 125 லட்சம் ரூபாய் இதற்கென ஒதுக்கப்பட்டிருக்கிறது.

மதுரை மாவட்டத்தில் நிகழ்ந்துள்ள செயல்களையும், இம் மாவட்டம் இத்துறையில் பெற்றுள்ள வெற்றிகளையும் இனிக் காணுவோம். திருநெல்வேலிக்கு உள்ளதைப் போன்ற கடல் வளம் இல்லையெனினும் உள்நாட்டில் பல சிறந்த நீர் நிலைகளை இந்த மாவட்டம் பெற்றிருக்கிறது. பெரியாறுத் தேக்கம், கோடைக்கானல் ஏரி, தேனூர் ஏரி முதலியவை என்றும் மீன் பிடிப்பதற்கு ஏற்ற நிலையில் இருக்கும். இங்கெல்லாம் மீனைப் பெருக்கி, மாவட்டத்தின் வருவாயை, ஐந்தாண்டுகளில், குறிப் பிடத் தக்க அளவு உயர்த்தியுள்ளதைக்காணலாம்.

சென்ற ஐந்தாண்டுகளிலும் மேற்கொள்ளப்பட்ட திட்டங்களை முதலில் விளக்கமாகப் பார்ப்போம் :—

(1) நீர்நிலைகளில் மீன் பிடித்தற்குள்ள வாய்ப்புகளை ஆராய்தல்

(2) நீர்நிலைகளில் மீனைப் பெருக்குதல்

(3) கோடைக்கானல் ஏரியைச் செப்பனிட்டு ஆராய்தல்

(1) மீனவர் வாழ்க்கை நிலையை உயர்த்துதல்

(5) பெரியாற்றினல் பயன்பெறும் ஆயக்குளங்களில் ஆராய்ச்சி

(6) தேசிய வளர்ச்சித் திட்டமும் சமுதாய நலத்திட்டமும்.

உள் நாட்டிலுள்ள நீர்நிலைகளில் மீன்பிடித்தற்குள்ள வாய்ப்புகள் பற்றி ஆராயப்பட்டதன் விளைவு குறித்து முதலில் கூறுவோம். இதன் பயனாக மதுரையிலுள்ள ஏழு குளங்களி லும், வடுகப்பட்டியிலுள்ள மண்டை ஊரணியிலும், மேலூரில் மூன்றிடங்களிலும், நவினப்பட்டிப் பெரிய ஊரணியிலும், கல்லுப்பட்டியிலுள்ள மூன்று நீர்நிலைகளிலும், மாதிரி

விளக்கப் பண்ணைகள் நிறுவப்பட்டன. இப் பண்ணைகளுள் நான்கு, அவைகளின் உரிமையாளர்களிடமே திருப்பிக் கொடுக்கப்பட்டு விட்டன.

இவ்விடங்களிலிருந்து 1954–55-ல் 22,680 பவுண்டு மீனும், 1955–56-ல் 27,000 பவுண்டு மீனும் கிடைத்துள்ளது.

கேனோஸ் (Chanos) என்னும் ஒரு வகை மீன் மிகப் பயனுள்ள உணவாகும். திட்டத்தின் தொடக்க காலத்தில் லட்சத்திற்குக் குறைவாகவே இம்மீன் கிடைத்து வந்தது. முதல் திட்ட காலத்தின் இறுதியில் 30 லட்சத்துக்கு மேலும் இது உயர்ந்துள்ளது.

கோடைக்கானல் ஏரியில் கோல்டன் கார்ப் (Golden carp) என்னும் ஒரு வகை மீனை வளர்த்து, ஆண்டுக்கு 5,000 மீன் குஞ்சுகளை அங்கிருந்து நிலப் பகுதியிலுள்ள நீர் நிலைகளுக்கு, வளர்ப்புக்காக அனுப்பி வருகின்றனர்.

மேலை நாட்டு வகைகளை நம் நாட்டில் வளர்க்கும் முறையில், சென்னை மீன் துறையில், இம்மாவட்டமே முதலிடம் பெறுகின்றது. திலேபியா (Tilapia) என்பது ஓர் அழகான வகையாகும். இது விரைவாக இனவிருத்தி செய்கிறது. மாவட்டத்தின் வருவாயை இது பெரிதும் அதிகரித்திருக்கிறது. ஆண்டுக்குச் சில ஆயிரங்களே செலவாகிக்கொண்டிருந்த இம் மீன்கள், இப்பொழுது ஆண்டுக்கு 15,000 மேனியில் வளர்ப்புக்கு மட்டும் செலவாகின்றன.

கோடைக்கானல் ஏரி 1952-ம் ௵ எப்ரல்மீ 1௨ மீன் துறையின் கைக்கு வந்தது. பத்தாண்டுகள் அவ்வேரி அரசாங்கத்தின் கண்காணிப்பிலேயே இருக்கும். இங்கு புது வகையான மீன்களை நிறைய வளர்த்து ஏரியை நிரப்பியதோடு

மீன் பிடிபபோருக்கு உரிமைச் சீட்டும் வழங்கப்பட்டது. அதனால் அரசாங்கத்திற்கு நல்ல வருவாய் கிடைத்தது. அதன் விவரம் :—

| ஆண்டு | உரிமைச் சீட்டுகள் | வருவாய் ரூ. அ. பை. |
|---|---|---|
| 1952–53 | 138 | 418 0 0 |
| 1953–54 | 51 | 153 0 0 |
| 1954–55 | 83 | 183 8 0 |
| 1955–56 | 187 | 411 0 0 |

மீனவரின் வாழ்க்கையை உயர்த்துவதிலும் அரசாங்கம் கவனம் செலுத்தத் தவறவில்லை. அதற்காகப் பல கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டன. இம்மாவட்டத்தில் இன்று மூன்று மீனவர் கூட்டுறவுச் சங்கங்கள் உள்ளன :—

| | உறுப்பினர் | பங்கு முதல் ரூ. |
|---|---|---|
| பழனி .. .. | 84 | 690 |
| பெரியகுளம் .. | 22 | 600 |
| மதுரை .. .. | 216 | 2,160 |

மீன் பிடிப்போரிடமே அந்தத் தொழில் முழுமையும் ஒப்படைப்பதே அரசாங்கத்தின் நோக்கம். முதல்படியாக, பழனி வட்டத்திலுள்ள 23 குளங்கள் அங்குள்ள மீனவர் சங்கங்கள் சார்பிலேயே விடப்பட்டுள்ளன.

புதிய வளர்ப்பு முறை பற்றிய அறிவு, மீனவருக்கு அவ்வப் பொழுது ஊட்டப்பட்டு வருகின்றது. விரைவாக இனவிருத்தி செய்யும் வகைகளை அவர்களுக்கு வழங்குகின்றனர். பழனியி லுள்ள கூட்டுறவுச் சங்கம், இனவிருத்திக்காக 3,875 லேபியோ (Labeo) மீன்களையும் 46 மிரர் கார்ப் (Mirror carp) வகைகளை யும் வாங்கித் தனக்கு கீழுள்ள நீர்நிலைகளில் பெருகச் செய்துள்ளது.

மீனவருக்குக் கடனுதவியும் தரப்படுகின்றது. அவர்தம் வாழ்வை உயர்த்துவதற்கான வேறு பலவற்றிற்கும் சிறந்த திட்டங்கள் உருவாக விருக்கின்றன.

மதுரை மாவட்டத்திலுள்ள பெரியாற்று ஆயக்குளங்களில் நிறுவபபட்டுள்ள பண்ணைகளின் நோக்கம், தத்தம் குளங்களில் மீனை எவ்வாறு பயன்பெறத்தக்க வகையில் வளர்ப்பது என, மக்களுக்கு மெய்ப்பித்துக்காட்டுவதேயாகும்.

1950-ல் பத்து ஆயக்குளங்களை இதற்காக எடுத்தனர். ஆண்டுதோறும் அங்கு மீன் பிடிக்கும் உரிமை ஏலத்தில் விடப்படுகின்றது. வருவாய் விவரம் :—

| | ரூ. |
|---|---|
| (1) தாமரைக்குளம் .. .. .. | 210 |
| (2) ஓடையான்குளம் .. .. .. | 200 |
| (3) கருங்காத்தட்டாங்குளம் .. .. | 400 |
| (4) நாரண சமுத்திரம் .. .. .. | 13 |
| (5) நாச்சிகுளம் .. .. .. | 300 |
| (6) சோழவந்தானிலுள்ள வாகரை நீர்நிலை .. | 6,030 |
| (7) தேனூர் பெரிய கண்மாய் .. .. | 445 |
| (8) வண்டியூர் நீர் நிலை .. .. .. | 2,467½ |
| (9) குன்னத்தூர் நீர் நிலை .. .. | 312 |
| (10) வரிச்சியூர் நீர் நிலை .. .. .. | 53 |

சமுதாய நலத்திட்டமும் தேசிய வளர்ப்புத் திட்டமும்—இத் திட்டங்களுக்கு உட்பட்ட இடங்களில் சிறப்பாகப் பல வேலைகள் நடந்தேறி இருக்கின்றன. மேலூர், மதுரை, நீலக்கோட்டை, ஆத்தூர், உசிலம்பட்டி, திருமங்கலம், கல்லுப்பட்டி ஆகிய 7 வட்டாரங்களில் மீன் பிடிக்கும் தொழில் சிறப்புற கவனிக் கப்பட்டு வருகின்றது. மதுரை வட்டாரத்தில் 1954–55-ல் 12 குளங்கள் எட்ரோபிளஸ் (Etroplus) என்னும் வகையினுல்

நிரப்பப்பட்டன. நாலாயிரத்து அறுநூற்று ஐம்பத்து ஐந்து எட்ரோபிளஸ், லேபியஸ், முசேல்ஸ் வகைகள் நீலக் கோட்டை வட்டாரத்தில் உள்ள 121 குளங்களில் விடப் பட்டுள்ளன. இக்குளங்கள் காந்தி கிராமம் பகுதியைச் சேர்ந்தவை. 1955-ஆம் ஆண்டில் மேலூர் வட்டத்தில் மீன் வளர்ச்சிக்காக, 3,505 ரூபாயை அரசாங்கம் வழங்கியது- உசிலம்பட்டி வட்டாரத்தில் 324 திலேபியா மீன் குஞ்சுகள் கிணற்றுக்காரர்களுக்கு அளிக்கப்பட்டதோடு, திதியன் ஊர் மன்றத்தின் வசம் 120 மீன் குஞ்சுகள் ஒப்படைக்கப்பட்டன. திருமங்கலம், கல்லுப்பட்டி வட்டாரங்களில் தரப்பட்ட மீன் களின் விவரம் :—

| மீன் வகை | | திருமங்கலம் | கல்லுப்பட்டி |
|---|---|---|---|
| முறேல் | .. | 1,200 | 4,230 |
| எட்ரோபிளஸ் | .. | 300 | 555 |
| திலேபியா | .. | 900 | .. |
| கேஞேஸ் | .. | .. | 753 |
| மிரர் கார்ப் | .. | .. | 62 |

கல்லுப்பட்டியிலுள்ள மூன்று மாதிரிப்பண்ணைகள் மீன் வளர்ச்சி பற்றிய செய்திகளை மக்களுக்கு நன்கு அறிவுறுத்தி வருகின்றன.

மேலை நாடுகள் சிலவற்றில் உள்ள அளவுக்கு மீனையே பெருவாரியாக நம்பி வாழ்கின்ற நிலை இந்திய நாட்டில் இல்லை. என்றாலும் மீன் ஒரு சிறந்த சத்துள்ள உணவன்றி யும், உணவுப் பற்றுக்குறையைப் போக்க பெருந்துணை புரிவது மாகும். எனவே மீன் வளர்ச்சியில் பெரும் கவனம் செலுத்தவேண்டியது மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். இதையறிந்துதான் முதல் ஐந்தாண்டுக் காலத்தில் நம் மாநிலத்தில் 49 லட்சம் ரூபாய் மீன் இலாகாவிற்காக

ஒதுக்கப்பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இன்னும் மிகுதியாக இதற்கு ஒதுக்கப்பட்டுள்ளது. 124·40 லட்சம் ரூபாயை மீன் இலாகா நம் மாநிலத்தில் செலவிடப் போகின்றது.

மதுரை மாவட்டத்தில் மீன் வளர்ப்புக்குப் பயன்படும் நீர் நிலையின் பரப்பு 6,380 ஏக்கர். நீர் நிலைகளின் எண்ணிக்கை 760. சென்ற ஐந்து ஆண்டுகளிலும் இவற்றில் இனவிருத்திக் காக விடப்பட்ட பலவகை மீன்களின் எண்ணிக்கை 70 லட்சம். இதில் குறிப்பிடத்தக்கது திலேபியா. இவ்வகை மீன் விரைந்து இனவிருத்தி செய்வதால் மக்கள் இதனை விரும்பிப் பெற்று நல்ல பயனுறுகின்றனர்.

மக்களுக்கு மீன் வளர்ப்புபற்றி அறிவுறுத்த அரசாங்கம் இம்மாவட்டத்தில் அமைத்திருந்த மாதிரிப் பண்ணைகள் பதினான்கு.

ஆழ்கடல் சொத்தும் இந்த மனிதருக்குத்தான் சொந்தம்



மீனவர் நலங்குறித்து உண்டாக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள் நான்கு. இக்கூட்டுறவுக் கழகங்களில் உள்ள உறுப்பினர் எண்ணிக்கை 314.

## கருப்பட்டி

கருப்பட்டி அல்லது பனைவெல்லம் காய்ச்சுதலும் மதுரை மாவட்டத்தில் ஒரு முக்கிய தொழிலாகும்.

திட்டத்தின் தொடக்க காலத்தில் கருப்பட்டி காய்ச்சும் உரிமை 624 பேருக்குத்தான் கொடுக்கப்பட்டிருந்தது. 1954-55 ஆம் ஆண்டின் இறுதியில் இத்தொகை 742 ஆக உயர்ந்தது.

கூட்டுறவின் மூலம் இவர்கள் நல்ல பயன் பெறுகின்றனர். 18 கருப்பட்டி காய்ச்சும் கூட்டுறவுச் சங்கங்கள் இருக்கின்றன. இவை யாவற்றிலுமாகச் சேர்த்து 801 உறுப்பினர் இருந்தனர். அவர் தம் பங்குத்தொகை ரூ. 6,706 ஆகும். ஆனால் 1955-ல் உறுப்பினர் தொகை 999 ஆகவும் பங்குத் தொகை 8,920 ரூபாயாகவும் உயர்ந்தது.

1950–51ல் 18,471 கருப்பட்டிகளே உற்பத்தி செய்யப்பட்டு விற்கப்பட்டன. 1954–55 ஆம் ஆண்டிலோ 38,210 கருப்பட்டிகள் உற்பத்தி செய்யப்பட்டு விற்கப்பட்டிருக்கின்றன.

மதுவிலக்கின் காரணமாக வேலையிழந்த பல மரமேறிகளுக்கு வேலை தேடித் தரப்பட்டுள்ளது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் இம் மாவட்டத்தில் மட்டும் 1,630 மரமேறிகள் வேலை பெற்றிருக்கின்றனர்.

சிறு சேமிப்பில் உறுப்பினர்களைப் பழக்கப்படுத்துவதற்காக, உண்டியல் பெட்டிகள் தந்து அவர்களை ஊக்குவித்து வந்தனர். 1952-ல் சுமார் 582 உண்டியல் பெட்டிகள் தரப்பட்டிருந்தன. கூட்டுறவுப்பணியாளர் தளராத முயற்சியுடன்

மக்களுக்குச் சேமிப்பின் நன்மைகள் குறித்து ஓயாது எடுத்துரைத்து வந்ததனால், மக்களுக்கு அதில் ஆர்வம் ஏற்பட்டது. அதனால் 1955-ல் கொடுக்கப்பட்டிருந்த உண்டியல்களின் எண்ணிக்கை 2,692 ஆகப் பெருகியது. ஐந்தாண்டுகளில் இம் மாதிரி சேமிக்கப்பட்ட தொகை யளவு ரூ. 25,562.

## பனங்கற்கண்டு

பாகநத்தம், கோழியூர், கோம்பை ஆகிய இடங்களிலுள்ள கருப்பட்டி உற்பத்திக் கூட்டுறவச் சங்கங்களுக்கு, கொப்பரை, அடுப்பு ஆகியவை முப்பது கவை (sets) அளிக்கப்பட்டுள்ளன. பாகநத்தம் சங்கத்திற்கு 1954–55-ல் மாவட்ட முன்னேற்ற நிதியிலிருந்து ரூ. 187–8–0 உதவப்பட்டது.

பாகநத்தமே உற்பத்தி ஆராய்ச்சிக்குச் சிறந்த பகுதியென்று தெரிந்தெடுக்கப்பட்டுள்ளது. பனங்கற்கண்டு செய்வகை உணர்த்துவோர், அச்சங்கத்திலுள்ள உறுப்பினர்களுக்குப் புதிய முறையில் கற்கண்டு உற்பத்தி செய்வது பற்றி 15 நாள் பயிற்சி கொடுத்தார். அடுப்பமைக்கும் முறை குறித்தும் பல விடங்களில் விளக்கம் தரப்பட்டது.

1954–55ஆம் ஆண்டில், காந்தி கிராமம் அடிப்படைப் பயிற்சிப் பள்ளியில், கருப்பட்டியும் இன்னும் அதுபோன்ற பொருள்களும் செய்யும் வகை குறித்துப் பயிற்சியாளருக்கு அவர் விளக்கமாக உணர்த்தினர். பனங்கற்கண்டு செய்வகை உணர்த்துபவர், அகில இந்தியக் கைத்தறி வாரத்திலும் கலந்துகொண்டு விளக்கவுரைகள் தந்தார்.

புதுப்பட்டி கூட்டுறவுச் சங்கம், அரசாங்கத்தினிடமிருந்து கடனாக ரூ. 7,500-ம் உதவியாக ரூ. 7,500-ம் பெற்று, ஒரு கிடங்கு அமைத்துள்ளது.

# காதி

காதிக்கு உரிய சிறப்பு மங்காமல் மேலும் வளர்வதற்கான பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆலைகள் பல்கி வரும் இருபதாம் நூற்றுண்டின் இடைப்பகுதியிலும் ஒரு நாடு காதிக்கு வாழ்வளிக்கிறது என்பது மிக எளிதான செயலல்ல.

மதுரை மாவட்டத்தில் பொறுக்கியெடுத்த ஐந்து பகுதிகளில் இவ்வேலை சிறப்பாக நடத்தப்பட்டது. சர்க்காவை அரசாங்கமே மக்களுக்கு அளித்து, அதற்கான விலையைப் பல தவணைகளில் சிறுகச் சிறுகப் பெற்றுக்கொள்கிறது. மதுரையில் ஒரு விற்பனைக் கிடங்கை நிறுவியுள்ளது.

வெண்துகில் வண்ணத்துகிலாகிறது.



சிறப்பாக வேலை நடைபெறுகின்ற ஐந்திடங்களிலும் இத் தொழிலில் ஈடுபட்டுள்ளோரின் எண்ணிக்கையும் அவர்களின் சராசரி வருவாயும் கீழே தரப்படுகின்றது. இப்புள்ளி விவரம் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை மட்டும் பற்றிய தாகும்.

| | | | வருவாய் ரூபாய். |
|---|---|---|---|
| நூற்போர் | .. | 59,000 | 11,22,503 |
| நெசவாளர் | .. | 1,685 | 3,71,206 |

தொழில்களுக்கு ஊக்கமும் ஆக்கமும் அளிப்பதற்காகப் பல பொருட்காட்சிகள் அமைக்கப்பட்டன. அகில இந்தியக் கைத்தறிவாரம் திண்டுக்கல்லில் 1955-ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் கொண்டாடப்பட்டது. 17 நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் அதில் பங்கு கொண்டன. அந்த வாரத்தில் மட்டும் ரூ. 45,000-க்குத் துணி விற்பனையாகி இருக்கின்றது. பல அறிஞர்களைக் கூட்டி சொற்பொழிவுகளும் நடத்தப்பட்டது.

தொழில் வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு மதுரையில் குடிசைத் தொழில் பொருட்காட்சி சாலை ஒன்று நிலையாக அமைக்கப்பட்டிருக்கின்றது. சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் இவற்றில் உண்டாக்கப்படும் பொருள்கள் அங்கே வைக்கப்பட்டிருக்கின்றன. விலைக்கும் தரப்படுகின்றன.



" வீடுதோறும் கலையின் விளக்கம்,
வீதிதோறும் இரண்டொரு பள்ளி,
நாடு முற்றிலும் உள்ளன ஊர்கள்
நகர்கள் எங்கும் பலபல பள்ளி "

—பாரதியார்.

# அறிவு . . .

# வளர !

## கல்வி

வள்ளுவரின் கருத்துப்படி பார்த்தால் இந்த நாட்டில் உள்ள பெரும் பான்மையோர் குருடர்களே. கல்வி யறிவு பெருத மக்கள் மிகுந்த நாட்டில் நிலவும் மக்களாட்சி உண்மை யான மக்களாட்சியாக அமைவது அருமை என அறிஞர் அஞ்சுகின்றனர். எனவே யாவரும் கல்வி பெறுமாறு செய் வது நாம் உடனடியாக மேற்கொள்ளவேண்டிய தலையாய பணியாகும்.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நம் மாநிலத்தில் கல்விக்காக 494 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டது. அதில் 406 லட்சம் ரூபாய் செலவிடப்பட்டுவிட்டது. பலதுறையிலும் கல்வி இன்று, நன்கு வளர்ந்து வருகிறது.

மதுரை மாவட்டத்தில் ஏற்பட்ட கல்வி வளர்ச்சி குறித்துச் சுருக்கமாக இங்கு காணுவோம்.

ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்கத்தில் இந்த மாவட்டத் தில் 1,927 பள்ளிகளே இருந்தன. இன்றோ இங்குள்ள பள்ளி



இவனினும் சிந்தனைச் சிற்பி உளரோ ?

களின எண்ணிக்கை 2,804. எனவே சென்ற ஐந்து ஆண்டு களில் இந்த மாவட்டத்தில் மட்டும் திறக்கப்பட்டுள்ள பள்ளி களின் எண்ணிக்கை 877. இவற்றுள் 292 பள்ளிகள் ஓராசிரியப் பள்ளிகளாகும்.

1951–52ல் பள்ளி மாணவர் தொகை :—

| | |
|---|---|
| ஆண்கள் | 139,674 |
| பெண்கள் | 67,328 |

இன்றுள்ள நிலை :—

| | |
|---|---|
| ஆண்கள் | 160,904 |
| பெண்கள் | 94,197 |





நமது அம்பர் சர்க்கா

எனவே கடந்த ஐந்தாண்டுகளில் கூடுதலாகியுள்ள மாணவர் 115,427 பேராகும். இவர்களுள் ஹரிஜன மாணவர், முகம்மதிய மாணவர் ஆகியோரின் விவரம் வருமாறு :—

| ஆண்டு | ஹரிஜனர் | முகம்மதியர் |
|---|---|---|
| 1951–52 | 20,458 | 10,092 |
| 1955–56 | 32,174 | 14,629 |

1951–ஆம் ஆண்டின் தொடக்கத்தில் 26 உயர்நிலைப் பள்ளிகள் இருந்தன. மாணவர் எண்ணிக்கை 24,591. இன்றுள்ள உயர்நிலைப் பள்ளிகள் 47. இங்குள்ள மாணவர் தொகை 33,898. முதியோர் கல்விக்காகத் தொடக்கநிலைப் பள்ளி ஆசிரியர், முதியோர் கல்விப் பயிற்சி நிலையங்களில் 6 வாரம் பயிற்சி பெற்றனர். அப்பயிற்சி இன்னும் தொடர்ந்து தரப்படுகிறது. முதியோரின் உளப்பாங்கு, அவருக்குக் கற்பிக்கும் முறை ஆகியவை பற்றிய உண்மைகளை இங்கு ஆசிரியர்களுக்குக் கற்பிக்கிறார்கள். ஸ்லைடுகள் தயாரிப்பதற்கான செய்முறைப் பயிற்சியும் தரப்படுகின்றது. மேலும் இவர்களுக்கு அடிப்படைக் கல்வி (Basic Education) பற்றிய பயிற்சி, மூன்று மாதங்களுக்குத் தரப்படுகின்றது. தொடக்கப் பள்ளிகளை கூடியமட்டும் விரைவில் அடிப்படைப் பள்ளிகளாக மாற்றுவதே நம் அரசாங்கத்தின் நோக்கம்.

வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்காக இந்திய அரசின் திட்டத்தின் கீழ் உடனடியாகத் திறக்கப் பட்ட ஓராசிரியப் பள்ளிகள், பயிற்சிபெறாத பலரையும் ஆசிரியராக கொண்டியங்கின. பின்னர் அவர்களுக்காகத் தனியே நான்கு வாரம் பயிற்சி யளிக்கப்பட்டது. உள்ளூர் முன்னேற்றத்திற்கான திட்டங்களும் (Local Development Schemes), சமூக நலத்திட்டங்களும் (Community Projects),



கூடி விளையாடு பாப்பா

தேசிய வளர்ச்சித் திட்டங்களும் (National Extension Schemes) நிலவிவரும் இடங்களில் கட்டப்பட்ட பள்ளிகளுக்கு, இத்திட்டங்கள் பேருதவியாக உள்ளன.

முதியோர் கல்வி—முதியோர் கல்வியைக் குறித்து முடிவிலே பேசுவதால் இதற்கு முதலிடம் அளிக்கப்படவில்லை என்று எண்ணிவிடக்கூடாது. முதியோர்க்குக் கல்வி புகட்டுவதிலுள்ள தொல்லைகள் யாவருமறிந்ததே. இருப்பினும் அப்பணி விடாமல் தொடர்ந்து செய்யப்படுகிறது.

சமூக நலத் திட்டமும், தேசிய வளர்ச்சித் திட்டமும் நிலவிவரும் பகுதிகளில் மட்டுமே முதியோர் கல்விக்கான பள்ளிகளைத் திறப்பது என்ற முடிவின்படி, அப் பகுதிகளில் 105 முதியோர் கல்விக் கூடங்கள் திறக்கப்பட்டுள்ளன.

**பயிற்சிப் பள்ளிகள்**—உசிலம்பட்டி, மேட்டுப்பட்டி, வத்தல குண்டு ஆகிய இடங்களில் அரசாங்க உதவியுடன் பயிற்சிப் பள்ளிகள் தொடங்கப்பட்டுச் சிறப்புற நடந்து வருகின்றன. மதுரையிலுள்ள அரசாங்கப் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் பயிற்சிபள்ளி ஒன்று துவக்கப்பட்டுள்ளது. மேலும் திண்டுக் கல்லில் இரண்டு, போடிநாயக்கனூரில் இரண்டு, மேலூரில் ஒன்று, பழனியில் ஒன்று எனப் பயிற்சி பள்ளிகள் சென்ற ஐந்தாண்டுகளில் முளைத்துள்ளன.

**கல்லூரிகள்**—செம்பகனூரிலுள்ள பாஸ்சி கல்லூரியும் மதுரையிலுள்ள பாதிமா கல்லூரியும் புதிதாகத் தொடங்கப் பட்டவை. நமது அரசாங்கத்தால் மதுரையில் புதிதாகத் தொடங்கப்பட்டுள்ள மருத்துவக் கல்லூரி குறிப்பிடத் தக்கது.

தொடக்கப் பள்ளிகள்

| ஆண்டு | எண்ணிக்கை | மாணவர் | |
|---|---|---|---|
| | | ஆண்கள் | பெண்கள் |
| 1951 | 1,587 | 129,716 | 62,478 |
| 1956 | 1,798 | 151,947 | 84 631 |
| அடிப்படைப் பள்ளிகள் | | | |
| 1951 | 27 | 2,103 | 986 |
| 1956 | 180 | 16,728 | 8,287 |
| பையன்களுக்கான உயர்நிலைப் பள்ளிகள் | | | |
| 1951 | 26 | 23,745 | 846 |
| 1956 | 47 | 31,845 | 2,053 |
| பெண்களுக்கான உயர்நிலைப் பள்ளிகள் | | | |
| 1951 | 12 | 127 | 4,866 |
| 1956 | 15 | 297 | 7,761 |

| ஆண்டு. | எண்ணிக்கை. | மாணவர் | |
|---|---|---|---|
| | | ஆண்கள். | பெண்கள். |
| | **பயிற்சிப் பள்ளிகள் (பையன்களுக்கு)** | | |
| 4951 | 2 | 423 | .. |
| 1956 | 2 | 308 | .. |
| | **பயிற்சிப் பள்ளிகள் (பெண்களுக்கு)** | | |
| 1951 | 6 | .. | 827 |
| 1956 | 8 | .. | 1,009 |
| | **அடிப்படைப் பயிற்சிப் பள்ளிகள் (பையன்களுக்கு)** | | |
| 1951 | 1 | 99 | .. |
| 1956 | 5 | 596 | 15 |
| | **அடிப்படைப் பயிற்சிப் பள்ளிகள் (பெண்களுக்கு)** | | |
| 1951 | 1 | 13 | 24 |
| 1956 | 3 | 42 | 202 |

வையத்தில் நின்று வானிலே அறிவோம்!



**மருத்துவக் கல்லூரி**—மதுரையில் தொடங்கப்பட்ட மருத்துவக் கல்லூரி யாவற்றினும் மிகச் சிறப்பு வாய்ந்ததாகும். சென்னைக்கு அடுத்தபடியாக மருத்துவக் கல்லூரி பெற்றுள்ள ஒரே நகரம் நமது மாநிலத்தில் மதுரையே. தமிழ் நாட்டின் இரண்டாவது பெரிய நகரத்தில் அது அமைந்ததும் பொருத்தமுடையதே. இக்கல்லூரியைப் பற்றிய விளக்கம் மருத்துவம் என்ற தலைப்பின்கீழ் தரப்பட்டுள்ளது. கட்டட வேலை 1951-52-ம் ஆண்டின் இறுதியிலேதான் தொடங்கியது என்றாலும் 1954-ஆம் ஆண்டு ஜூன் மாதத்திலேயே கல்லூரி வேலை செய்யத் தொடங்கிவிட்டது. மத்திய அரசு சுகாதார மந்திரி ஸ்ரீமதி அமிர்த கௌரி அவர்கள் 1954-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 2உ-ல் இதனைத் திறந்து வைத்தார். 1956-57-ஆம் ஆண்டில், அதாவது வருகிற ஆண்டில், இக்கல்லூரி சம்பந்தமான வேலைகள் யாவும் முடிவுபெற்றுவிடும்.

—

" மழைதொழில் உதவ மாதிரங் கொழுக்கத்
தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளைய
நிலனும் மரனும் பயனெதிர்பு நந்த
நோயிகந்து நோக்கு விளங்க."

—மதுரைக்காஞ்சி.

# நாடு . . .

# உயர!

நாடு என்பது இந்திய நாட்டைப் பொறுத்த வரையில் நாட்டுப்புறமே. இந்திய நாட்டின் வளர்ச்சி நாட்டுப் புறத்தின் வளர்ச்சியே. இந்திய நாட்டு மாந்தருள் நூற்றுக்கு 82·7 பேர் நாட்டுப் புறத்திலேதான் வாழ்கின்றனர். சென்னை மாநிலத்தில் இன்னும் சிறிது குறைவு. இங்கு நாட்டுப்புற மக்கள் தொகை நூற்றுக்கு 78·1 பங்கே உள்ளது. நம் மாநிலத்தில் உள்ள ஊர்களின் எண்ணிக்கை 19,491 ஆகும். சுமார் 2 கோடியே 80 லட்சம் மக்கள் இங்கு வசிக்கின்றனர்.

எனவே நாடு உயர, ‘ ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய் ’ எனப் பாரதியர் அடுக்கிக் கொண்டே போகிறாரே அந்த மக்களின் வாழ்வு உயரவேண்டும் ; வளம் பெற்றுத் திகழவேண்டும். சமுதாய நலத் திட்டம், சமுதாய வளர்ச்சித் திட்டம், தேசீய வளர்ச்சித் திட்டம் ஆகிய அனைத்தும் இதனைக் கருத்தில் கொண்டே உருவாக்கப்பட்டன.

நாட்டுப்புறம் என்னும் பொழுது அது சிறப்பாக உழவரையே சுட்டும். பிறதொழில்களில் நெசவு குறிப்பிடத்தக்கது.

எஞ்சிய தொழில்களால் வாழ்வோர் மிகக்குறைவே. 1951–ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கின்படி நமது மாநிலத்தில் நிலத்தை நம்பி வாழ்வோரின் தொகைமட்டும் 21,990,710 ஆகும். மொத்த மக்கள் தொகையே 35,734,489 தான் என்பது கருதத்தக்கது.

நாட்டுப்புறத்தை முன்னேற்றுவதில் உள்ள முட்டுக்கட்டைகள் அறியாமையும் வறுமையுமே. மக்களிடம் பரவியுள்ள இவை அகலச் செய்வதே நாட்டுப்புறத்தை முன்னேற்றும் வழியாகும். பனிப்படலம் நீங்கியவுடன் பகலவன் ஒளி நம் மீது பாயத்தடையென்ன ? எனவே அறியாமை வறுமையாகிய பனிப்படலம் மறையுமேல் நல்வாழ்வென்னும் பகலவன் ஒளியில் மக்கள் திளைக்க முடியும்.

நாட்டுப்புறத்தார்க்கு வேண்டும் பொருளை உதவினால் மட்டும் போதாது. அதைப் பயன்படுத்துவதற்கான வழிவகைகளையும்

சுகாதார முறையில் அமைந்துள்ள ஊருணி



அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கவேண்டும். அவர்களை நெருங்காமல் தொலைவில் நின்று உணர்த்தப்படுமேல், அது விழலுக் கிறைத்த நீராகும். அதை அவர்கள் நம்புவதே அருமை. எனவே பயிற்சி மிக்க அரசாங்க அலுவலாளர்கள், நாட்டுப்புற மக்களைப் போலவே அவர்களோடு கலந்து உறவாடி, அவர்களுக்கு வழிகாட்டிகளாக வேண்டும். நாட்டுப்புறத்தார்க்கு வேண்டியவற்றைத் தேடியளித்து அவர்களை நன்முறையில் ஆற்றுப்படுத்துவதோடு, அவர்களுக்குத் தன்னம்பிக்கையையும் ஊட்டினுல் தான் நாடு விரைந்து முன்னேறும்.

இந்திய நாட்டின் முதன்மையான தொழில் வேளாண்மை. எனவே மக்கள் தொகையில் பெரும்பாலோர் உழவர்களாகவும் சிற்றூர்களில் வாழ்பவர்களாகவும் உள்ளது இயற்கையே.

சென்னை மாநிலத்தில் உள்ள சிறிய ஊர்களின் எண்ணிக்கை 19,491 ; மக்கள் தொகையில் நூற்றுக்குச் சுமார் 78 பேர் அங்குதான் வாழ்கின்றனர் எனக் கூறினேம். உண்மையில் இந்திய நாட்டின் வாழ்க்கை நிலையை, இந்த நாட்டுப்புற மக்களைக் கொண்டுதான் அளவிடவேண்டும். ஒரு சில நகரங்களோ, அங்கு காணப்படும் ஆடம்பரங்களோ, இந்தியாவின் வளத்தைக் காட்டுவன ஆகிவிடமாட்டா. இதையுணர்ந்துதான் 'நாட்டுப்புறமே இந்தியாவின் உயிர்நாடி' என நம் தலைவர்கள் அடிக்கடி வற்புறுத்திக் கூறி வருகின்றனர்.

முதல் திட்டத்தில் சென்னை மாநிலம் நாட்டுப்புற வளர்ச்சிக்காக 30 லட்சம் ரூபாயை ஒதுக்கியிருந்தது. ஆனல் அது போதுமானதாக இல்லை. அதன் வளர்ச்சியிலே அரசாங்கம் கொண்ட ஆவலும் அளவற்றதாக இருந்தது. அதன் விளைவாகக் கடந்த ஐந்தாண்டுகளில் 77 லட்சம் ரூபாய் இத்துறையில் செலவிடப்பட்டுள்ளது.

சமூக நலத்திட்டம், சமுதாய வளர்ச்சித் திட்டம், தேசீய வளர்ச்சிப் பணி, உள்ளூர் முன்னேற்றம் ஆகிய பலவகையான

திட்டங்களாலும் மதுரை மாவட்டத்தில் நல்ல வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. முதலில் சமூக நலத்திட்டத்தின் பணிகளைக் காணுவோம்.

சமூகநலத்திட்ட வட்டாரங்கள், நான்குதாம் இந்த மாநிலத்தில் இருக்கின்றன. இந்த நான்கினுள், பெரியாறு வட்டாரம் மதுரை மாவட்டத்தில் இருக்கிறது. மதுரை, மேலூர், நீலக்கோட்டை வட்டங்களிலுள்ள 330 ஊர்களுக்கு இத்திட்டம் பலனளிக்கிறது. இவற்றின் மொத்தப் பரப்பு 517·79 சதுர மைல்களாகும். இவற்றால் பயன் பெறும் மக்கள் தொகை 447,819.

வேளாண்மை, கால்நடை வளர்ச்சி, துப்புரவு, மருந்து உதவி, கல்வி, போக்குவரத்துத் தொடர்பு, குடிசைத் தொழில்கள் ஆகிய பலவற்றிலும் போதிய கவனம் செலுத்தப்படுகிறது.

| | | ரூபாய்கள். |
|---|---|---|
| **வேளாண்மையும் கால்நடை வளர்ச்சியும்—** | | |
| விதைகள் வாங்கக் கடன் | .. | 4,13,000 |
| உழவுக் கருவிகள் வாங்கக் கடன் | .. | 11,000 |
| உரம் முதலியவற்றிற்காகக் கடன் | .. | 51,000 |
| கால்நடை வளர்ச்சிக்காகக் கடன் | .. | 1,07,000 |
| கோழிப்பண்ணை முதலியன | .. | 2,000 |
| மின்சார இறைப்புக்கு குழாய்கள் | .. | 9,01,000 |
| தக்காவிக் கடன்கள் | .. | 6,55,000 |
| இறைப்புக்குழாய்கள் (எண்ணெய் யந்திரம்) | | 4,52,000 |
| **துப்புரவும் மருந்தும்** | | |
| குடிநீர், கழிவுநீர், மலக்கழிவிடம் | | 76,000 |
| மருத்துவமனை, மருத்துவ விடுதிகள், மருந்து. | | 1,63,000 |
| மனைகள் எழுப்பக் கடன் | | 74,000 |

| | ரூபாய்கள் |
|---|---|
| **கல்வி—** | |
| பள்ளிக்கட்டிடங்கள் | 1,86,000 |
| புத்தகம் முதலியவை | 1,43,000 |
| சமூகக்கல்வி | 1,06,000 |
| **தொடர்பு—** | |
| பாலமும் பாதைகளும் .. | 4,67,000 |
| **குடிசைத் தொழில்கள்—** | |
| பிற யந்திரம் முதலியன | 17,000 |
| குடிசைத் தொழில் முன்னேற்றம் | 79,000 |
| ஏனைய செலவுகள் | 17,000 |

இங்கு குறிக்கப்பட்டுள்ளவையாவும் இந்த வட்டாரத்தில் உள்ள இரு பிரிவுகளாகிய ஆத்தூர், உசிலம்பட்டி ஆகிய வட்டாரங்களில் செய்யப்பட்ட செலவின் விவரமாகும். இவ் வட்டாரம் ஒவ்வொன்றிலும் நிறைவேறியுள்ள பணிகளை விளக்கமாகக் காணுவோம். ஆத்தூர் வட்டாரத்தின் பரப்பளவு 81·78 சதுர மைல்களாகும். பத்தொன்பது கிராமங்கள் இதனுள் அடங்கியுள்ளன. இங்குள்ள 93,861 பேர் இதனால் நலன் அடைகின்றனர்.

முதலில் வேளாண்மை பற்றிய வளர்ச்சிகளைக் கூறுவோம். 140 ஏக்கர் பரப்பில் பொறுக்கு விதைகள் விதைக்கப்பட்டன. காய்கறிகள் பயிரிடப்பட்ட மொத்த நிலப்பரப்பு 697 ஏக்கர். காய்கறிகள் பழவகைகள் இவற்றை மிகுப்பதில் அரசாங்கம் குறிப்பாகக் கவனம் செலுத்தி வருவது இங்கு நினைவு கொள்ளத்தக்கது. பசுந்தழை உரம் இடப்பட்ட நிலத்தின் அளவு 4,152 ஏக்கராகும். பசுந்தழை வளர்ப்பதற்காகப் பயன்படுத்தப்பட்ட வித்தின் அளவு 154 மணங்கு. 2,513 மணங்கு

ரஸாயன எருவும் போடப்பட்டுள்ளது. 6,050 மணங்கு பிண்ணுக்கும் நிலத்திற்கு உரமூட்டி விளைவை மிகுத்துள்ளது. இவையே அல்லாமல் 87,054 மணங்கு மக்கிய எருவும் (கம்போஸ்ட்) நிலத்தை வளப்படுத்தியுள்ளது. 142 உழவுக் கருவிகள் குடியானவருக்கு வழங்கப்பட்டுள்ளன.

புதுமுறை உழவு பற்றிய விளக்கம் உழவருக்கு நேரடியாகத் தரப்பட்டுள்ளது. விளக்கம் தரப்பட்ட பகுதிகள் (plots) 715. ஜப்பானியமுறை நெல் சாகுபடி 3,615 ஏக்கரில் மேற்கொள்ளப்பட்டது. 1,032 பழமரங்கள் உற்பத்தி செய்யப்பட்டுள்ளன. நடப்பட்ட வேறுவகையான மரங்கள் 96,428. வீணாகக் கிடந்த 3 வறுநிலங்கள் தக்க முயற்சிகளால் மீட்கப்பட்டு வளமுள்ளவைகளாக மாற்றப்பட்டுள்ளன.

கால்நடை வளர்ப்புக்காக 3 இனவளர்ச்சி நிலையங்கள் (Breeding Centres) உள்ளன. இவற்றில் 6 காங்கயம் எருதுகளும், 2 முர்ரா (Murrah) எருதுகளும் உள்ளன. தர்மத்துப்பட்டியிலுள்ள செயற்கைக் கருத்தரிப்பு (artificial insemination) நிலையத்திற்கான பொருள்கள் யாவும் வாங்கப்பட்டன. இந்த நிலையத்திற்கு 2 காங்கயம் எருதுகளும், முர்ரா எருமை ஒன்றும் வாங்கப்பட்டுள்ளன. இதற்கான கட்டிடமும் எழுப்பப்பட்டுள்ளது. தர்மத்துப்பட்டியில் கால்நடை மருத்துவசாலை ஒன்றுள்ளது. மேலும் ஆத்தூரிலும், திருமலைராயபுரத்திலுமாக இரு மருத்துவசாலைகள் உள்ளன. சித்தயங்கோட்டையில் அங்கங்கே சின்னாள் தங்கும் மருந்தகம் (Camp dispensary) ஒன்றும் உள்ளது. 36,878 கால்நடைகள் இவைகளில் மருத்துவம் பெற்றுள்ளன. கோழிகளிலும், பிறவகையிலுமாக 17,481 பறவைகள் பாதுகாக்கப்பட்டுள்ளன. 14,908 ஆடுகள் புழு நீக்கிச் சுத்தம் செய்யப்பட்டுள்ளன. 18,969 கால்நடைகளுக்கு ஊசி போடப்பட்டுள்ளது.

நீர்ப்பாசன வசதிகள் செய்து தருவதிலும் போதிய கவனம் செலுத்தப்பட்டுள்ளது. 362 பழங்கிணறுகளை

ஆழப்படுத்தவும், 54 புதுக்கிணறுகள் தோண்டுவதற்குமாகக் குடியானவருக்கு 2,51,650 ரூபாய் முன்கூட்டியே வழங்கப் பட்டது. 44 மின்னிறைப்பு யந்திரங்களுக்காகவும், 6 எண்ணை இறைப்பு யந்திரங்களுக்காகவும் உழவரிடையே 75,000 ரூபாய் வழங்கப்பட்டது. இவற்றால் கூடுதலாகப் பயனுற்ற நிலப்பரப்பு 1,152 ஏக்கராகும்.

சுகாதாரத்துறையில் 3,282 அடி நீளத்திற்கு கழிவுநீர்க் கால்கள் அமைத்துள்ளமை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். 13 குளிப்பறைகளும், 105 நாட்டுப்புற மலக்கழிவிடங்களும் (Rural latrines) அமைக்கப்பட்டுள்ளன. 737 கழிவுநீர் தேங்கு குழிகளும் (soak pits) கட்டப்பட்டுள்ளன. தொத்து நோய் பரவாமல் இருப்பதற்காக 7,315 பேருக்கு ஊசி போடப் பட்டது. கிராமங்களுக்கு 6 குடிநீர்த் திட்டங்கள் நிறை வேற்றித் தரப்பட்டுள்ளன. இதுவரையில் இவ்வட்டாரத்தில் 55 புதிய குடிநீர்க் கிணறுகள் தோண்டப்பட்டுள்ளதோடு, 42 பழைய குளங்கள் செப்பனிடப்பட்டுள்ளன. இவை யனைத்தும் கிராமங்களில் செய்யப்பட்டுள்ள வேலைகளாகும்.

ஆத்தூரில் ஒரு சமுதாய நலத்திட்ட மருந்தகம் (Community project dispensary) உள்ளது. சின்னாளப் பட்டியில் அடிப்படைச் சுகாதார நிலையம் (Primary health centre) ஒன்றுள்ளது. இதுகாறும் 52,273 பிணியாளருக்கு இவை மருத்துவம் பார்த்துள்ளன. திம்மைநாய்க்கன்பட்டி யிலும், தர்மத்துப்பட்டி கிராமத்திலுமாக இரு மருத்துவ மனைகள் உள்ளன. 281 குழந்தைப்பேறுகள் இங்கு கவனிக் கப்பட்டுள்ளன. மற்றும் 4,170 மாதர், மருத்துவம் பெற்றுள்ளனர்.

ஏழைகளுக்கு குடியிருப்பு வசதிக்காக, புதிய வீடுகள் எழுப்பவும், பழையவற்றைப் புதுப்பிக்கவும் 75,000 ரூபாய் கடனாக இவ்வட்டாரத்திற்கு வழங்கப்பட்டுள்ளது.

42 புது மனைகள் திட்டகாலத்தின் இறுதிக்குள கட்டியாகி விட்டன. மேலும் பல மனைகள் எழும்பி வருகின்றன.

உசிலம்பட்டி வட்டாரத்தில் நிறைவேற்றப்பட்டுள்ள பணிகளைக் குறித்து விளக்கமாகக் காணுவோம். இவ்வட்டாரத்தின் பரப்பு 164 சதுர மைல்கள். இதிலுள்ள கிராமங்கள் 54. முதலில் தேசிய வளர்ச்சித் திட்டத்தின் கீழிருந்த இவ் வட்டாரம், 1–4–55-ல்தான் சமுதாய நலத்திட்ட வட்டாரமாக மாறியது.

வேளாண்மைத் துறையில் பொறுக்குவிதை, எருவிடல், புதுமுறை உழவு குறித்த விளக்கமாகிய பல பணிகள் நடந்தேறியுள்ளன. நெல், சோளம், மற்றும் பல தானியங்களில் 252 மணங்கு பொறுக்கு விதை வித்திடப் பட்டுள்ளது. 3,375 மணங்கு அம்மோனியம் ஸல்பேட்டும், 657 மணங்கு பாஸ்பேட்டும், 56 மணங்கு உரியாவும் எருவாகப் போடப்பட்டுள்ளன. 2,215 எருக்குழிகள் தோண்டப்பட்டுள்ளன. 13 உழவுக்கருவிகள் வழங்கப் பட்டுள்ளன. 400 ஏக்கரில் ஜப்பானியமுறைச் சாகுபடி மேற் கொள்ளப்பட்டது. 44 விளக்கப் பண்ணைகள் உள்ளன. 23 இடங்களில் உரமிடும் முறை குறித்து விளக்கப்பட்டுள்ளது. இரும்புக் கலப்பை உழவு 68 இடங்களில் செய்து காட்டப்பட்டது. 50 இடங்களில் மோட் வீல் (mhote wheel) பயன்படுத்தும் முறை விளக்கிக் காட்டப்பட்டது. கிருமிகளைக் கொல்ல மருந்து அடிக்கும் வகைகளை 64 இடங்களில் செய்து காட்டியுள்ளனர். இத்தகைய விளக்கங்களால் உழவர் வேளாண்மைபற்றி பல புதிய உண்மைகளை எளிதில் உணர்ந்து கடைப்பிடிக்கின்றனர்.

நூற்றிருபத்தாறு ஏக்கர் நிலப்பரப்பு மீட்கப்பட்டு, பயிர்த் தொழிலுக்கு ஏற்ற நிலையில் பண்படுத்தப்பட்டுள்ளது. பழ மரச் சாகுபடியில் 145 ஏக்கர் நிலப்பரப்பு முனைந்து நிற்கின்றது.

கால்நடை வளர்ச்சிக்கான பல வேலைகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன. இனவளர்ச்சி மிக்க 6 காளைகள் இங்குள்ளன. 654 காளைகளுக்குக் காயடிக்கப்பட்டுள்ளது. 1,171 கால்நடை களுக்கு மருத்துவம் பார்க்கப்பட்டுள்ளது. ஊசிபோடப்பெற்ற வற்றின் எண்ணிக்கை 10,152.

கட்டதேவன்பட்டியில் ஒரு குட்ட நோய் மருத்துவ நிலையம் உள்ளது. 1,411 கழிவு நீர்த் தேங்கு குழிகள் (Soak-pits) இவ்வட்டாரமெங்கும் தோண்டப்பட்டுள்ளன. 161 மலக்கழி விடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. 674 அடி நீளத்திற்குக் கழிவுநீர் கழிவதற்கான கால்வாய்கள் அமைக்கப்பட்டுள்ளன. குடிநீர் வசதிக்காக இங்கு தோண்டப்பட்டுள்ள புதுக் குளங்கள் 31. 70 பழைய குடிநீர்க் கிணறுகள் பழுது பார்க்கப் பட்டுள்ளன.

கல்வித் துறையிலும் இவ்வட்டாரம் நல்ல முன்னேற்றம் கண்டது. 11 புதிய பள்ளிகளும் 8 முதியோர் கல்விக் கூடங் களும் புதிதாகத் திறக்கப்பட்டன. 236 கேளிக்கை விழாக்கள் (Community entertainments) நடந்தன. 23 பொழுது போக்கு நிலையங்களும் (Community recreation centres) திறக்கப்பட்டுள்ளன. 9 மாலை நேரப் பள்ளிகளும் 9 சமுதாயக் கல்வி நிலையங்களும் முதியோருக்குக் கல்வி அளிக்கின்றன. 5 குழந்தைகள் பூங்கா திறக்கப்பட்டுள்ளன. இரண்டு கண் காட்சிகள் நடந்திருக்கின்றன. கிராமத் தலைவர்களை, வேளாண்மைப் பண்ணைகளுக்கும் பிறவிடங்களுக்கும் அழைத் துச் சென்று காட்டும் பணியும் இவ்வட்டாரத்தில் மேற்கொள் ளப்பட்ட சிறப்பான ஒன்றாகும்.

37 தொடக்கப் பள்ளிகளை, அடிப்படைப் பள்ளிகளாக (basic schools) மாற்றத் திட்டமிட்டு, முதல் திட்டகாலத்திற்குள் 27 பள்ளிகள் அவ்வாறே மாற்றப்பட்டுவிட்டன. 23 ஆசிரியர் கள் அதற்கான பயிற்சி பெற்றனர். இன்னும் ஆசிரியர்களைப் பயிற்றி, அதற்கேற்பப் பள்ளிகளும் அடிப்படை பள்ளிகளாக

விரைவில் மாற்றப்படும். தொடக்கப் பள்ளிகள் யாவற்றையும் கூடியமட்டும் அடிப்படை பள்ளிகளாக மாற்றுவதே அரசாங்கத்தின் நோக்கமாகும். 16,000 ரூபாய்ச் செலவில் கைத்தொழில் கருவிகள், தோட்டவேலைக்கான கருவிகள், கல்வி கற்பிக்கத் தேவையான பொருள்கள் ஆகியவை, பதினாறு அடிப்படைப் பள்ளிகளுக்கு வழங்கப்பட்டுள்ளன. இதைப் போலவே, தொடக்கப் பள்ளிகளுக்கும், வேண்டிய பொருள்கள் அளிக்கப்பட்டுள்ளன. பள்ளி ஒன்றுக்கு ரூ. 500 வீதம் 37 பள்ளிகளுக்கு இவ்வாறு தரப்பட்டுள்ளது. இந்த வட்டாரத்திலுள்ள 50 பள்ளிகளுக்கு விளையாட்டுக் கருவிகள் வழங்கப்பட்டுள்ளன. 12 பள்ளிகள் விரிவாக்கப்பட்டு இருக்கின்றன.

பாதைகள் போடும் வேலையிலும் இவ்வட்டாரம் நன்கு வளர்ந்துள்ளது. 48 கச்சாப் பாதைகள் போடப்பட்டுள்ளன. இவற்றின் குறுக்கே பாதையை நீர் அறுத்துச் செல்லாமல் கடப்பதற்கான மதகுகளும் அமைக்கப்பட்டுள்ளன. அவ்வாறு கட்டப்பட்ட மதகுகள் 19. தேசிய ராணுவப்படையினர் $3\frac{1}{4}$ மைல் நீளத்திற்கு ஒரு பாதை போட்டுள்ளனர்.

தொழில்துறையில் இங்கு நிறைவேறிய பணிகளை இனிக் காணுவோம். நான்கு நூற்பு நிலையங்கள் செயலாற்றிவரும் இவ்வட்டாரத்தில், 300 சர்க்காக்கள் வழங்கப்பட்டுள்ளன. மாதிரிக்காகத் தர்மத்துப்பட்டியில் ஒரு வார்தா கனி அமைப்பு (Wardha Ghani Unit) நிறுவப்பட்டுள்ளது. இச்செக்கில் இதுவரை 25 மணங்கு எண்ணை பிழியப்பட்டு விற்கப்பட்டுள்ளது. 7 பேர் எண்ணெய் இறக்குவதில் பயிற்சி பெற்றனர். 2 பழைய செக்குகள் வார்தாவாக மாற்றியமைக்கப்பட்டன.

சமுதாயச் சிமிதி தொழிற்சாலை (Community Smithy workshop) ஒன்று இந்த வட்டாரத்தில் நிறுவுவதற்கான ஏற்பாடுகள் பூர்த்தியாகிக் கட்டடவேலை நடைபெற்று வருகின்றது.

ஆத்தூர்க் கிராமத்தில் பாய்பின்னுவோர் கூட்டுறவுச் சங்கம் ஒன்று தொடங்கப்பட்டுள்ளது. குயத் தொழில், ஆடையணிகள் செய்தல் ஆகியவற்றிற்கான வேறு இரண்டு கூட்டுறவுச் சங்கங்களும் தொடங்கப்பட்டுள்ளன.

மொத்தம் எதிர்பார்க்கப்பட்ட 7,51,000 ரூபாயில், ரூ.5,19,130 மட்டுமே திட்டகாலத்திற்குள் செலவழிந்துள்ளது. இதுபோகக் கடனாகக் கொடுக்க நினைத்த தொகையளவு ரூ. 7,49,000. இதில் கொடுக்கப்பட்டுள்ளது ரூ. 5,51,405.

தேசிய வளர்ச்சிப் பணியின் கீழ் நடைபெற்ற வேலைகளை இனிக்காணுவோம். இம்மாவட்டத்தில் மிகப் பின் தங்கிய வட்டமாகிய திருமங்கலம் முழுவதிலும் இத்திட்டம் செயலாற்றியது. கல்லுப்பட்டி, உசிலம்பட்டி, திருமங்கலம் என மூன்று பகுதிகளாக இது தொழில்பட்டது.

கல்லுப்பட்டி, திருமங்கலம் ஆகிய பகுதிகளில் இந்தப் பணியின் வெற்றிகள் பற்றிய சுருக்கம் :—

திருமங்கலம்—217 சதுர மைல் ; 112 ஊர்கள் ; 122,195 மக்களையுடையது.

கல்லுப்பட்டி—332 சதுர மைல் ; 108 ஊர்கள் ; 133,996 மக்களைக் கொண்டது.

| | திருமங்கலம் | கல்லுப்பட்டி |
|---|---|---|
| எரு— | | |
| அம்மோனியம் சல்பேட்டு | 23,475 டன் | 214 டன் |
| சூபர்பாஸ்பேட்டு | 122 டன் | 5 டன் |
| யூரியா | 7 டன் | 3 டன் |
| சூபர்பாஸ்பேட்டு [Triple]— | | 15 டன் |
| விதை— | | |
| நெல் | 40 டன் | 9 டன் |
| சோளம் | 128 டன் | 2 டன் |
| பருத்திக்கொட்டை | 334 டன் | 25 டன் |
| பசுந்தழையுரம் | 48 டன் | 2 டன் |

| | திருமங்கலம் | கல்லுப்பட்டி |
|---|---|---|
| **உழவுக் கருவிகள்—** | | |
| இரும்புக் கலப்பை | 11 | 2 |
| நீர்தெளிக்கும் கருவிகள் [Sprayers] | 29 | 3 |
| டஸ்டர் | 19 | 7 |
| பூச்சி மருந்து | 1,200 பவுண்டு | 2 டன் |
| பரம்படிக்கும் பலகை | — | 4 |
| ஜப்பானிய நடவைக்கருவி | — | 2 |
| வறு நிலத்தில் எருவைக் கலக்கும் கருவி | — | 1 |
| விளக்கம் தருவதற்கான பண்ணைகள் | 118 | 49 |
| பழ மரங்கள் | 63 எக்கர் | 14 எக்கர் |
| காய் கறிகள் | 571 எக்கர் | 117 எக்கர் |
| பண்படுத்தப்பட்ட நிலம் | 153 எக்கர் | 128 எக்கர் |
| **சமூகக் கல்வி—** | | |
| புதிதாகத் தொடங்கப்பட்ட பள்ளிகள் | 13 | 11 |
| முதியோர் கல்வி நிலையங்கள் | 34 | 15 |
| கல்வி பெற்ற முதியோர் | 822 | 479 |
| பொழுது போக்குக்கான நிலையங்கள் | 38 | 31 |
| சமுதாயக் கேளிக்கைகள் | 63 | 28 |
| சமூகக் கல்வி நிலையங்கள் | 17 | 15 |
| பெண்கள் கழகம் | 1 | 3 |
| இளைஞர் கழகம் | 15 | 24 |
| குழந்தை கழகம் | 1 | — |
| உழவர் கூட்டுறவுகள் | 4 | 5 |
| மஹில சமிதீஸ் | 6 | 4 |



ஊருக்கு உழைக்கும் உத்தமர்கள் !

தடுப்பு ஊசிகள் போடுதல், இன வளர்ச்சி மிக்க நல்ல கால் நடைகள் பறவைகள் ஆகியவற்றை ஊர் மக்களுக்கு அளித்தல் ஆகிய வேலைகள் மிகச் சிறப்புடன் நடந்தன.

குடிசைத் தொழில்களின் வளர்ச்சியில் போதிய கவனம் செலுத்தப்பட்டது. காதியின் முன்னேற்றம் செவ்வனே கண்காணிக்கப் பெற்றது. பல சர்க்காக்கள் மக்களுக்கு அளிக்கப்பட்டதோடு, நெய்யும் முறையை அறியாதவர்களுக்கு விளக்கிக் காட்டுவதற்காகப் பல நிலையங்களும் புதிதாகத் திறக்கப்பட்டன.

**மொத்தச் செலவு வகை—**

| | கடன் | உதவி | மக்கள் பங்கு |
|---|---|---|---|
| திருமங்கலம் ரூ. | 3,70,000 | 3,03,713 | 1,70,437 |
| கல்லுப்பட்டி ரூ. | 3,70,000 | 2,99,948 | 3,17,300 |

உள்ளூர் வளர்ச்சி வேலைகள் 1953–54-ல் தான் உருவாகிய ஒரு திட்டமாகும். தேசீய வளர்ச்சிப் பணி, சமூக நலம் இவை யிரண்டு திட்டமும் இல்லாத விடங்களில் உள்ளூர் வளர்ச்சித் திட்டம் வேலை செய்யத் தொடங்கியது.

1953–54, 1954–55 ஆகிய இரண்டு ஆண்டுகளில் 328 வேலைகளைப் பூர்த்தி செய்வதென்று இருந்தனர். வேலைகளின் விவரமும், பூர்த்தியாகியுள்ளவையும், கீழே தரப் பட்டுள்ளன :—

| | செய்ய எண்ணியவை | முடிந்தவை |
|---|---|---|
| ஊர்ப் பாதைகள் .. | 184 | 16 |
| பள்ளிக் கட்டிடங்கள் .. | 68 | 16 |
| மருத்துவ மனைகளும் மருத்துவ விடுதிகளும். | 11 | 2 |
| மலக் கழிவுத் தொட்டிகளும் கழிவுநீர்க் கால்வாய்களும் | 23 | 7 |
| கால்நடைச் செல்வம் பேணலும் வேளாண்மைப் பணிகளும். | 15 | 6 |
| யாவருக்கும் பயன்படும் பொதுப் பணிகள். | 27 | 9 |
| மத்திய அரசின் உதவி | ரூ. 3,74,691 | |
| மக்களின் பங்கு | ரூ. 4,21,023 | |

திட்டத்தின் இறுதியாண்டில் இவ்விடங்களில் நடந்தேறிய பணிகள் 553. இவற்றிற்காகிய மொத்தச் செலவு ரூ. 32,10,364. குடிநீர்க் கிணறுகள் 300; கால்நடைச் செல்வத்தை வளர்ப்பதற்கான அமைப்புகள் 3; சுகாதார வேலைகள் 14; மருத்துவம் சம்பந்தப்பட்டவை 5; கிராமப் பாதைகள் 145; மதகுகள் 13; உயர் நிலைப் பள்ளிகள் 4; வேறு வகையான பள்ளிகள் 40; பொது மக்கள் உபயோகத் திற்கான பணிகள் 13. இப்படியே இன்னும் பல பணிகள்

மேற்கொள்ளப்பட்டு விரைந்து நிறைவேறி வருகின்றன. கூட்டுறவுச் சங்கங்களுக்கான இரு கிடங்குகள் கட்டப்பட்டு உள்ளன.

திருமங்கலம் வட்டத்திலும் திண்டுக்கல் வட்டத்திலுமுள்ள காந்திநிகேதன் ஆசிரமும், காந்தி கிராமமும் குடிசைத் தொழில் முன்னேற்றத்திலும், நாட்டுப்புற நலனிலும், மிக்க கவனம் செலுத்தி வருகின்றன. ஆற்றல்மிக்க பல பணிகளையும் நிறைவேற்றியிருக்கின்றன. கிராம சேவக்குகள் பயிற்சி நிலையமும், சமுதாயக் கல்வி வகுப்போருக்குக்கான பயிற்சி நிலையமும் இவற்றோடுதான் இணைக்கப்பட்டிருக்கின்றன.

சென்ற ஐந்தாண்டில் நாட்டுப் புறங்களில் தோண்டப்பட்ட கிணறுகளின் விவரம் :—

| | | | | |
|---|---|---|---|---|
| 1950–51 | .. | .. | .. | 90 |
| 1951–52 | .. | .. | .. | 82 |
| 1952–53 | .. | .. | .. | 117 |
| 1953–54 | .. | .. | .. | 99 |
| 1954–55 | .. | .. | .. | 89 |
| 1955–56 | .. | .. | .. | 137 |

## பாதை

உள்நாட்டுப் போக்குவரத்திற்கும் வணிகப் பெருக்கத்திற்கும் பாதைகள் மிகவும் தேவை. உலகப்போருக்குப் பின்னர் உடனே உருவாக்கப்பட்ட திட்டங்கள் தொடர்ந்து முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டன. மதுரை மாவட்டத்தில் போடப்பட்ட பாதைகளின் விவரம் :—

### மாநிலப் பாதை இலாகா

| | | மைல்கள் | செலவு (லட்சத்தில்) |
|---|---|---|---|
| தார்ப் பாதை | .. | 39·3 | 3·98 |
| காங்கிரீட் பாதை | .. | 14·0 | 6·32 |

| | | மைல்கள் | செலவு (லட்சத்தில) |
|---|---|---|---|
| புதிய பாதைகள் | .. | 39·1 | 2·08 |
| புதிய பாலங்கள் | .. | 3 (எண்) | 4·09 |
| மதகுகளும் செப்பனிடுதலும். | | 8 (எண்) | 0·69 |

மாவட்ட ஆட்சி மன்றம்

| | | | |
|---|---|---|---|
| புதிய பாதைகள் | .. | 401·2 | 12·63 |
| புதியகப்பிக்கல் பாதை. | | 125·3 | 4·47 |
| புதிய பாலங்கள் | .. | 1 (எண்) | 0·59 |
| மதகுகளைப் பழுது பார்த்தல். | | 16 (எண்) | 3·17 |

பல்வேறு தேசியத் திட்டங்கள்

| வட்டாரத்தின் பெயர் (Blocks) | | பக்கா (மைல்) | கச்சா (மைல்) |
|---|---|---|---|
| பெரியார்த் தேக்கம். | | 12·1 | 87·9 |
| ஆத்தூர் | .. | 14·3 | 20·8 |
| உசிலம்பட்டி | .. | .. | 37·8 |
| திருமங்கலம் | .. | .. | 12·6 |
| கல்லுப்பட்டி | .. | 1·0 | 15·5 |

உள்ளூர் வளர்ச்சித் திட்டத்தின் கீழ் ஐந்தாண்டுகளில் ஏற்பட்ட முன்னேற்றம் :—

| | | |
|---|---|---|
| (1) புதிதாகப் போடப்பட்ட பாதை நீளம். | | 298 மைல் |
| (2) கப்பிக்கல்லிட்ட பாதை நீளம். | | 188 மைல் |
| (3) தார்ப் பாதை நீளம் | .. | 2 மைல் |

நாட்டுப் புறங்களை இணைக்கும் வேலையில் மதுரை மாவட்டம் பெரும் பொருளைச் செலவிட்டிருக்கிறது. சென்ற ஐந்தாண்டு களில் ஊர்களிடையே போக்கு வரத்துத் தொடர்புக்காகச் செய்யப்பட்ட செலவின் விவரம் கீழே தரப்பட்டுள்ளது :—

| | | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|
| 1951–52 | .. | .. | 2,017 | 3 | 0 |
| 1952–53 | .. | .. | 3,083 | 1 | 0 |
| 1953–54 | .. | .. | 285 | 6 | 0 |
| 1954–55 | .. | .. | 7,137 | 13 | 0 |
| 1955–56 | .. | .. | 2,286 | 13 | 0 |

மாவட்ட ஆட்சி மன்றமும் நகராட்சி மன்றங்களுமாகக் கடந்த ஐந்து ஆண்டுகளில் இம் மாவட்டத்தில் போட்டுள்ள பாதைகளின் மொத்த நீளம் 808 மைல் 7 பர்லாங்காகும்.

போக்குவரத்துக்கு ஏற்ற பாதைகள் முதலியவை இல்லாமல் இருப்பது, நாட்டுப்புற வளர்ச்சிக்குப் பெருந்தடையாகும். முதல் ஐந்தாண்டில் நம் மாநில அரசாங்கம் 358 லட்சம் ரூபாயை ஒதுக்கியதும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இத்துறையில் 807½ லட்சம் ரூபாயைச் செலவிடத் துணிந்திருப்பதும், நம் நாட்டுப் புறத்தின் கட்டுகளை முற்றத்தகர்த் தெறியும் என்பதற்கு ஐயமில்லை.

"சாதிக் கொடுமைகள் வேண்டாம் ;—அன்பு
தன்னில் செழித்திடும் வையம் ;
ஆதர வுற்றிங்கு வாழ்வோம் ;—தொழில்
ஆயிரம் மாண்புறச் செய்வோம்."

—பாரதியார்.

# தாழ்வு...
# நீங்க!

---

நீர் பெருகுவதாலும் நிலங் கொழிப்பதாலும், வளம் பெருகும். நமது வயிறும் கட்டாயம் நிரம்பும். ஆனால் நலஞ் சிறந்து விடாது. அதற்கு அறிவு பெருக வேண்டும்; வாழ்விலே அமைதி நிலவவேண்டும். ஆனால் மக்கள் பிறப்பிலே ஏற்றத்தாழ்வு நிலவும் நாட்டில் அமைதி தவழவோ அறிவு பெருகவோ எவ்வாறு இயலும்? தாழ்வு நீங்காத வரையில் மக்கள் பூசலும் பிணக்கும் ஒழிந்து வாழார். உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற எண்ணம் தொடர்ந்து நிலைபெறும் நாட்டிலே எல்லோரும் கூடி இன்புற்றிருத்தல் முயற்கொம்பே. உள்ளூரக் கலகம் நிகழ, மேலாக நிலவுவதுபோல் தோன்றும் அமைதி வெறும் கானல் நீர். இத்தகு வெம்பாலையிலே மகிழ்ச்சி பொங்குமென நினைப்பது குழந்தை நினைப்பு. ‘நிலா, நிலா ஓடிவா’ என மழலை ஒலியெழுப்பித் தன் சிறு கையால் தண்மதியை நம்பிக்கை யோடு அழைக்கிறதே குழந்தை, அதைப் போன்றது. இந்த

மடமை இருள் இன்னும் ஏனோ மனிதவுலகை விட்டு நீங்கிய பாடில்லை. நீங்காத வரையில் உலகம் உய்ய வழியில்லை.

## தாழ்த்தப் பட்டோர்

கீரியும் பாம்புமாய்ச் சண்டையிட்டுச் சாதி
கீழென்றும் மேலென்றும் நாட்டி விட்டு
பாரதத் தாய்பெற்ற மக்களென்று நிதம்
பல்லவி பாடிப் பயனெதுவோ ?

—தேசிக விநாயகம் பிள்ளை.

உலகிலே எத்தனையோ வகையான தாழ்வுகள் இருக்கின்றன. ஆனால் பிறப்பினால் உயர்வு தாழ்வு கற்பிப்பதைப் போன்ற கீழான ஒன்று இருக்கமுடியாது. மனிதன் இன்னும் தன் காட்டுமிராண்டித்தனங்களை முழுதும் ஒழித்துவிடவில்லை எனப் பறை சாற்றுவதுபோல், இருபதாம் நூற்றாண்டிலும் இந்த இழிநிலை அங்கங்கே வாழ்ந்து வருகிறது.

நமது நாட்டிலே பரவியிருந்த தீண்டாமைக் கொடுமை நமக்கு என்றும் நீங்காத மாசு ; நாம் வெறும் வாய் வீரர்கள், ஆரவார வேதாந்திகள் எனப் புறவுலகத்தார் நம்மை எள்ளி நகையாடுவதற்கு காரணமாக இருந்தது.

அண்ணல் காந்தி தென்னாப்பிரிக்காவில் இருந்த பொழுது, அவர் ‘ கறுப்பன் ’ என்ற காரணத்திற்காக, வெள்ளை அம்பட்டன் தலைச்சவரம் செய்ய மறுத்தானாம். அப்பொழுது நம் தீண்டாமைக் கொடுமையை எண்ணி தாம் உள்ளம் நொந்ததமையைத் தம் சுய சரிதையில் (சத்தியச் சோதனை) உருக்கமாக விளக்குகிறார்.

தீண்டாமைக் கொடுமை இந்த நாட்டிலே என்று தோன்றியதோ தெரியவில்லை. ஆனால் தித்திக்கும் தீந் தமிழில் தெய்வக் கவிமழை பொழிந்த நாயன்மார்களும், ஆழ்வார்களும் தீண்டாமையின் முதல் விரோதிகள். 'ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்—கங்கைவார்ச் சடைகரந்தார்க் கன்பராகில், அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே' என்ற பண்ணைப் பாடிக்கொண்டே தீண்டாமையைப் போற்றுகின்றவன் சைவ சமயத்திற்கே மாசு கற்பிக்கின்றான். பாணாழ்வார்களின் வரலாறு தெரிந்தும், தீண்டாமைக்குத் தன் நெஞ்சகத்தில் இடங்கொடுப்பவன் தூய வைணவத்தைக் கறைப்படுத்துகிறான். பாசுரங்களை ஓதிவிடுவதால் மட்டும் அவன் வைணவனாகி விடான். அதை அவன் கையில் தொடுவதே கூடப் பெரும்பாவம்.

ஆழ்வார்கள் நாயன்மார்களின் பக்தித்தேனைப் பருகிப் பருகித் தன் வாணாளைப் போக்கிய தமிழகத்தில் இன்னும் தீண்டாமை வாழ்வதென்பது கொடுமையினும் கொடுமை. தீண்டாமை வாழும் இடத்தில் சைவம் வாழுவதாகச் சொல்லுவதும் தவறு; வைணவம் வாழுவதாகச் சொல்லுவதும் தவறு. எனவே இந்துக்களும் பிற மதத்தினரும் ஒருங்கே கூடி இப் பேயினை விரட்டி யோட்டத் துணிந்தனர். அப்பொழுதுதான் நமது மாசும் நீங்கியது. நாம் தமிழரென்ற பெருமையோடு இன்று தலைநிமிர்ந்து நிற்கவும் முடிகிறது.

இக் கொடுமையைத் துடைக்க அண்ணல் காந்தி பட்ட இடர்களையும், சிந்திய கண்ணீரையும், இருபதாம் நூற்றாண்டு இந்தியா தன் கண்களால் கண்டது. ஆனால் இதற்கு முன்பும் எத்தனையோ பெருமக்கள் மக்களினத்தில் கால் கொண்டுவிட்ட இக்கொடுமையை எண்ணியெண்ணி நெஞ்சம் நொந்திருக்கின்றனர். உள்ளம் நைந்து உருகியிருக்கின்றனர்.

'ஓர் இனத்தைத் தாழ்வுபடுத்துவது கொடுமை; பிறப்பிலே உயர்வு தாழ்வில்லை' என்ற முதற் குரலை இந்தியாவிலே புத்தர் எழுப்பினார். அடுத்து நம் அருட்கவி வள்ளுவரின் குரல் கேட்கின்றது. 'பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்' என வல்லோசை கொடுத்து வன்மையுடன் அழுத்திக் கூறுகிறார். அதன் பின் எழுந்தது ஒரு அடியார் குரல். அவர் பெயர் திருமூலர். அவர் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' எனத் தமிழன் கொள்கையைச் சாறுகப் பிழிந்து தந்துள்ளார்.

பின்னர் வந்தவர்களுள் ஒரு அம்மையார் குறிப்பிடத் தக்கவர். அவர் காலம் தெரியவில்லை. பாடல் தமிழ் நாவலர் சரிதையில் உள்ளது.

சந்தன மரமும் வேம்பும் தனித்தனி கந்த நாறும்
அந்தணர் தீயில் வீழ்ந்தால் அது மணம்நாறக் காணேன்
செந்தலைப் புலையனார்க்கும் தீ மணம் அதுவே நாறும்
பந்தமும் தீயும் வேறோ பாய்ச்சலூர் கிராமத்தாரே ?

இந்த வெண்பாவை இசைத்த அம்மையின் நெஞ்சம் சாதிக் கொடுமையை எண்ணி எந்த அளவுக்கு நைந்திருக்கிறது என்பதை நம்மால் கற்பனை செய்து பார்க்க முடியவில்லை. இவர் பாடிய இன்னும் சில பாட்டுகள் தமிழ் நாவலர் சரிதையில் உள்ளன. 'கபிலரகவல்' என்ற தமிழ் நூலும் குறிப்பிடத்தக்க ஒன்று. பிறப்பினால் உயர்வு தாழ்வு கற்பிக்கும் முறையை இந்த ஆசிரியர் வன்மையாகவும் தெளிவாகவும் கண்டிருக்கிறார். எள்ளல் நகையோடு சுவைததும்ப இந்த நூல் அமைந்துள்ளது. இவ்வளவுக்குப் பிறகும் தீண்டாமை நீண்டநாள் வாழ்ந்து கொண்டுதான் இருந்தது. இன்றோ யாவும் பழங்கதை.

யாவற்றிற்தும் மேலாகத் தாழ்த்தப்பட்டோரிடையே காணப் படும் அறியாமையும் வறுமையுமே அவர்களின் தாழ்வுக்கு முக்கிய காரணங்களாக இருக்கின்றன. பணம் படைத்தவன் முன் எதுவுமே நிற்பதில்லை என்பதை அன்றட வாழ்க்கை யிலே காணுகின்றோம். சாதி நெருப்பு அவனை நெருங்கவே அஞ்சும். அசுரர் அம்பு இராமபிரான் முன் தெண்டனிடு மாமே அது போலச் செல்வர் முன் யாவுமே மண்டியிடும். என்றுமே அதுதான் உலகம். "பொருளில்லார்க்கு இவ் வுலகமில்லை" என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் னரே வள்ளுவர் கூறவில்லையா ?

எனவேதான் நம் அரசாங்கம், தாழ்த்தப்பட்டோரின் வாழ்க்கை நிலையை உயர்த்துவதற்கெனவே தனித்திட்டம் ஒன்று வகுத்து, பொருட் செலவைப் பாராது அருந்தொண்டு ஆற்றுகின்றது. அவர்தம் வாழ்க்கை உயர உயர தீண்டா மை யரக்கன் சிறிது சிறிதாக வெந்து, இறுதியில் சாம்ப லாகி விடுவான் என்பது திண்ணம்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் பிற்பட்ட வகுப்பினர் முன்னேற்றத்திற்காக நமது மாநிலத்தில் 416 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது. ஆனால் ஆர்வத்தின் காரணமாக விரைந்து தொழிற்பட, அதன் விளைவாக 440 லட்சம் ரூபாய் திட்டகாலத்திற்குள் இத்துறையில் செலவழிந்துள்ளது என் பதை மக்கள் உணரவேண்டும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் இன்னும் நிறைந்த பலனை நல்கி, புழுவென நெளிந்த மக்களை மனித உலகிலே மக்களாக உலவவிடும் என்று திடமாக நம்பலாம். இதில் ஒதுக்கப்பட்டுள்ள தொகை சுமார் 600 லட்ச ரூபாய்களாகும். தீண்டாமை யென்னும் இப்புலை வழக்கைத் துடைத்துத் தமிழகத்தின் மாசுபோக்க மதுரை மாவட்டத்தில் நடந்தேறியுள்ள பணிகளை இனி காணுவோம்.

எல்லாவற்றிலும் முதலிடம் பெறத்தக்கது கல்வி. கண் கொடுத்த பின்னர் தானே மற்றவற்றைக் காட்டவியலும் ? திட்டத்தின் தொடக்க காலத்தில் தாழ்த்தப்பட்டோருக்கென 13 பள்ளிகள் இருந்தன. இவற்றில் 26 ஆசிரியர் பணி யாற்றினர். ஆசிரியருள்ளும் பன்னிருவர் தாழ்த்தப்பட்ட இனத்தினர் என்பது குறிப்பிடத்தக்கது. 1,017 மாணவர் அப்பொழுது கல்வியறிவு பெறும் வாய்ப்புப் பெற்றிருந்தனர். இன்றோ 1,695 பிள்ளைகள் அத்தகைய வாய்ப்பைப் பெற்றிருக்கின்றனர். மொத்தம் 17 பள்ளிகளும் 40 ஆசிரி யன்மாரும் இப்பொழுது உள்ளனர். ஐந்தாண்டுகளிலும் முறையே கல்விக்குச் செலவழிக்கப்பட்டுவந்த தொகையின் விவரம் :—

| | | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|
| 1951–52 .. | .. | .. | 17,336 | 10 | 0 |
| 1952-53 .. | .. | .. | 2,069 | 3 | 0 |
| 1953–54 .. | .. | .. | 11,838 | 8 | 0 |
| 1954–55 .. | .. | .. | 27,548 | 4 | 0 |
| 1955–56 .. | .. | .. | 36,032 | 0 | 3 |

இப்பள்ளிகளில் உள்ள பிள்ளைகள் யாவருக்கும் பகலுணவு அளிக்கப்படுகிறது.

ஆண்டுவாரியாக இந்த மாவட்டத்தில் நடைபெற்ற பணிகளை இனிக் காணுவோம். திட்டத்தின் தொடக்ககாலத்தில் ஐந்து கிணறுகள் பழுதுபார்க்கப்பட்டன. அதற்காகிய செலவு ரூ. 6,863. 4 ஏக்கர் 63 செண்ட் பரப்புள்ள நிலம் தாழ்த்தப் பட்டோருக்கு இவ்வாண்டில் உடமையாக்கப்பட்டுள்ளது.

1952-53 ஆம் ஆண்டில் மாணவருக்கு தரப்பட்ட பொரு ளுதவியில் 39,896 ரூபாய் செலவழிந்துள்ளது. மேலும் இவ்

வாண்டில் நடந்த குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி, முப்பது தாழ்த்தப்பட்ட மாணவரில்லங்கள் திறக்கப்பட்டுள்ளதாகும். அங்குள்ள மாணவருக்கு எல்லா வசதிகளும், இயன்ற அளவு, செய்து தரப்பட்டுள்ளன. 1,10,250 ரூபாய் இப்பணிக்குச் செலவிடப் பட்டுள்ளது. தாழ்த்தப்பட்ட மாணவருக்கென்றே ஏற்பட்ட இவ் விடுதிகளில், பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த மாணவர்கள் 314 பேர் இருந்தனர். இவர்களுக்கு வழங்கப்பட்ட உதவித் தொகை 13,650 ரூபாய். மாணவர் அனைவருக்குமே (விடுதியில் தங்காத வருக்கும்) பொருளுதவி அளிக்கப்பட்டது. இதனால் இந்த ஆண்டில் செலவழிந்த தொகை ரூபாய் 51,862-8-0 ஆகும். ஹரிஜன மாணவரும், பின்தங்கிய பிறவகுப்பைச் சேர்ந்த மாணவர்களும், வேறுபாடின்றி கலந்துண்டு மகிழும் காட்சி, என்றும் கண்டு இன்புறத்தக்கது. கள்ளங்கபடற்ற அச்சிறுவர்களைக் கண்டேனும் பெரியவர்கள் திருந்தவேண்டும்.

இந்த ஆண்டில் எட்டு குடிதண்ணீர்க் கிணறுகள் ரூ. 6,970 செலவில் செப்பனிடப்பட்டன. புதுக்கிணறுகள் தோண்டும் வேலையும் தொடங்கப்பட்டது. நிலக்கோட்டை, திண்டுக்கல், திருமங்கலம் வட்டங்களில் ஹரிஜனச் சேரிகளுக்குப் பாதை வசதிக்காக 7,168 ரூபாய் செலவிடப்பட்டது.

மேலும் பயிரிடுவதற்காக ஹரிஜனங்களுக்கு 4 ஏக்கர் நிலம் வழங்கப்பட்டுள்ளது. வீடுவாசலற்ற 54 குடும்பங்களுக்கு மனைநிலம் வாங்கித் தரப்பட்டது.

ஒவ்வொரு மாதமும் 30-ஆந்தேதி ஹரிஜன நாள் கொண்டாடப்பட்டுவருகிறது. வைதிக இந்துக்களும் ஹரிஜனங்களும் இக்கூட்டங்களில் கலந்து கொள்ளுவர். அரசாங்கம் ஹரிஜனங்களுக்காகச் செய்துள்ள தொண்டுகள் அங்கு எடுத்து விளக்கப்படும்.

1953–54-ல் 34 மாணவர் இல்லங்கள் இருந்தன. இவற்றுள் 19 இல்லங்கள் மாவட்ட ஹரிஜன சேவா சங்கத்தின் பார்வையிலிருந்தன. இவ்வில்லங்களில் 941 பேர் தங்கியிருந்தனர். தாழ்த்தப்பட்டோருக்கு ரூ. 42,345-ம், பின்தங்கிய வகுப்பாருக்கு ரூ. 7,515-மாக இந்த ஆண்டில் செலவாகியுள்ளது.

அம்மாச்சியாபுரத்தில் குளிக்கும் அறை கட்டுவதற்காக ரூ. 1,350 ஒதுக்கப்பட்டது. குடிநீர்க் குளங்களைச் செப்பனிடுவதற்காக மேலும் 4,236 ரூபாய் செலவிடப்பட்டது.

இந்த ஆண்டில் 72 குடும்பங்களுக்கு மனைவசதி செய்து தரப்பட்டுள்ளது. அதற்காகிய செலவில் ரூ. 8,782–14–5, அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

1954–55 ஆம் ஆண்டில் 35 மாணவரில்லங்கள் இருந்தன. மாவட்டத் தாழ்த்தப்பட்டோர் சேவாசங்கம் இவற்றுள் 19 இல்லங்களைக் கண்காணித்து வந்தது. தாண்டிக்குடியிலுள்ள மாணவரில்லம் அரசாங்கத்தின் பார்வையில் உள்ளது. எல்லா இல்லங்களுக்கும் ஆகியுள்ள செலவின் விவரம் :

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| தாழ்த்தப்பட்டோர் | .. .. | 1,48,341 | 9 | 5 |
| பின்தங்கிய வகுப்பார் | .. .. | 33,840 | 0 | 0 |

தாழ்த்தப்பட்டோர் நலப் பள்ளிகளுக்கு புத்தகம், எழுது பலகைகள் முதலியன வாங்கி உதவுவதற்காக இந்த ஆண்டில் ரூ. 2,800 செலவாகியுள்ளது.

சில பள்ளிகள் வாடகை மனைகளில் வைக்கப்பட்டிருந்தன. அவைகளின் வாடகைக்காக ரூ. 516 செலவாகியுள்ளது.

திருமலை நாயக்கன் மஹால்—>

ஏழு கிணறுகள் 1,808 ரூபாய் செலவில் செப்பனிடப்பட்டுள்ளன. கூத்தம்பட்டி, மூர்த்திநாய்க்கன்பட்டி, எரசக்கநாய்க்கனூர் ஆகியவிடங்களில் குளிப்பறைகள் கட்டுவதற்காக ஒதுக்கப்பட்ட 7,000 ரூபாயில் 3,320 ரூபாய் செலவழிந்துள்ளது. திண்டுக்கல் வட்டத்திலுள்ள செல்லமத்தடிக்கு வழியமைப்பதற்காக 1,010 ரூபாய் செலவிடப்பட்டது. பொம்மனம்பட்டித் தடத்தைச் செப்பனிடுவதற்காக ரூ. 101 செலவாகியது. தாழ்த்தப்பட்டோருக்கு 126 மனையிடங்கள் இந்த ஆண்டில் வாங்கித் தரப்பட்டுள்ளன.

தாண்டிக்குடி அரசாங்க மாணவர் இல்லத்தை விரிவாக்கும் நோக்கத்துடன் ரூ. 4,000 ஒதுக்கப்பட்டுள்ளது. இவ்விடுதி புலைமகாருக்காகக் கட்டப்பட்டதாகும்.

100 புலையர் குடும்பங்களுக்கு ஆடை நல்குவதற்காக தாழ்த்தப்பட்டோர் நல நெறியாளரால் (Director of Harijan Welfare) 1,000 ரூபாய் ஒதுக்கப்பட்டது. அதைக்கொண்டு இக்குடும்பங்களுக்கு ஆடை வாங்கியளிக்கப்பட்டது.

நரிக்குறவருக்குப் பதினோரு மனைகள் கட்டித்தரப்பட்டன. மதுரை வட்டத்தில் எழுப்பப்பட்ட இவ்வீடுகளுக்கு ஆகிய செலவு ரூ. 3,300. பெரியகுளம் வட்டத்தில் 300 ரூபாய் செலவில் ஒரு மனையும் கட்டத்தரப்பட்டுள்ளது.

தாழ்த்தப்பட்டோர் நலநாள் எல்லாவிடங்களிலும் சிறப்புடன் கொண்டாடப்பட்டது. தீண்டாமையைப் பூண்டோடு ஒழிக்க வேண்டுவதன் இன்றியமையாமை, சேரிமக்களுக்கு நன்கு அறிவுறுத்தப்பட்டது.

1955–56-ல் இம்மாவட்ட மாணவரில்லங்களின் எண்ணிக்கை 34. இவற்றுள் மாவட்டத் தாழ்த்தப்பட்டோர் சேவா சங்கத்தின் கீழ் 19 இல்லங்கள் உள்ளன. தாண்டிக்குடி இல்லம், மாவட்ட நல அலுவலர் (District Welfare Officer) கீழும்

ஏனையவை தனிப்பட்டோர் கண்காணிப்பின் கீழும் இருக்கின்றன. இவைகளுக்கு நல்கப்பட்ட பண உதவி:

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| தாழ்க்கப்பட்ட மாணவர் | .. | 1,47,227 | 8 | 0 |
| பின்தங்கிய வகுப்பார் .. | .. | 53,909 | 8 | 0 |
| ஆக மொத்தம் | .. | 2,01,157 | 0 | 0 |

புத்தகம், எழுது பலகைகள் முதலியவற்றிற்காக ரூ. 3,800 அளிக்கப்பட்டுள்ளது.

புலையர் தங்கிப் படிப்பதற்கான பள்ளியொன்று, கோடைக்கானல் வட்டத்திலுள்ள கோட்டக்கொம்பு என்னுமிடத்தில் தொடங்கப்பட்டுள்ளது. 30 சிறுர் அங்கு தங்கிப் படிக்கலாம்.

நரிக்குறவரின் சிறுவருக்குக் கல்வியளிக்கத் தங்கும் இடத்தோடு கூடிய பள்ளியொன்று இவ்வாண்டு திறக்கப்பட்டது. 5,000 ரூபாய் செலவில் பள்ளிக்கட்டிடம் எழுப்பப்பட்டுள்ளது. 45 சிறுவர்கள் இங்கு தங்கிப் படிக்கின்றனர். உணவு, உடை, புத்தகம் ஆகியவற்றிற்காகிய செலவு ரூ. 1,345.

குடிநீர்க் குளங்களைச் செப்பனிட 8,436 ரூபாய் செலவாகியது. 5,998 ரூபாய் செலவில் 9 ஊர்களில் குளிப்பறைகள் கட்டப்பட்டன. இவை அனைத்தும் தாழ்த்தப்பட்டோருக்காகவே என்பதை மறந்துவிடலாகாது.

செல்லமாண்தடி, விளாச்சேரி ஆகிய சேரிகளின் தடங்களுக்காக முறையே ரூ. 1,700-ம் ரூ. 456-ம் செலவாகியுள்ளது. 346 மனையிடங்கள் தாழ்த்தப்பட்டோருக்காக இவ்வாண்டில் வாங்கித் தரப்பட்டுள்ளன. அதற்குச் செலவாகியுள்ள பணம் ரூ. 35,661.

மேலகூடலூர்ப் பகுதியிலுள்ள புலையருக்குப் பதினைந்து சதை எருதுகள் வாங்கவும், பிற உழவுக் கருவிகள் வாங்கவும் 10 300 ரூபாயைத் தொழில் உழைப்புக் கூட்டுறவுத் துறை அளித்தது. அத்தொகையில் ரூ 5,584 செலவாகியுள்ளது. எருதுகள் வாங்கப்பட்டுள்ளன; அவைகளுக்குக் கொட்டகைகளும் போட்டுத் தரப்பட்டுள்ளன. மேலும் தொடர்ந்து வேலை நடைபெறுகிறது.

மக்களை மலேரியாவிலிருந்து காப்பதற்காக ரூ. 1,100 ஒதுக்கப்பட்டுள்ளது. இத் தொகையில் 228 தப்பட்டிகள் வாங்கி வழங்கப்பட்டுள்ளன. கீழ்பழனிக் குன்றுகளில் வாழும் புலையருக்கு இவை அளிக்கப்பட்டன. மேலும் கண்டாமனூர், கீழ் பழனிக் குன்றுகள், சிறுமலைக் குன்றுகள் ஆகிய இடங்களிலுள்ள புலையருக்கு, 115 ரூபாய் பெறுமான மழிப்புக் கருவிகள் (shaving sets) வழங்கப் பட்டுள்ளன. தாண்டிக்குடி குன்றுகளிலுள்ள ஆதிக்குடிகளின் சிறுருக்காக ரூ. 565 பெறுமான ஆடைகள் வழங்கப்பட்டன. கண்டமனூர், கீழ் பழனி, சிறுமலைக் குன்றுகளிலுள்ள புலையருக்கு ஆடைக்காக ரூ. 1,000 செலவிடப்பட்டது. மேலும் இங்குள்ளவருக்கு மனைகள் கட்டித் தரவும் திட்டமிடப் படடுள்ளது. இங்கு 42 குடில்கள் எழுப்பப்படும். அவற்றிற் காக ரூ. 4,200 ஒதுக்கப்பட்டுள்ளது. குடிசைகள் எழும்பி வரு கின்றன.

நரிக்குறவரின் பிள்ளைகள் தங்கிப் படிப்பதற்கான பள்ளி களும், நரிக்குறவருக்கு 19 மனைகளும் கட்டுவதற்கு முறைய ரூ. 5,000-மும் ரூ. 7,500-மும் ஒதுக்கப்பட்டு, வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன.

இவ்வளவு பணத்தையும் உழைப்பையும் ஊற்றிவரும் அரசாங்கம், தீண்டாமையை ஒழிக்கத் தளராத பேச்சுத் தொண்டும் ஆற்றி வருகிறது. மக்களிடையே தீண்டாமையால் நேரும் கேடுகளைத் தெளிவாக எடுத்து விளக்கி, அவர்கள் மனங்கொள்ளும் வகையில் கொள்கைகள் பரப்பப்படு கின்றன. ஒரு துணைச் சேவக்கும் (The Deputy Sevak) இரு உதவிச் சேவக்குகளும் (two Assistant Sevaks) இத்துறையில் குறிப்பிடத்தக்க பணியாற்றி வருகின்றனர்.

“ இருட்டறையில் உள்ளதடா உலகம் சாதி
இருக்கின்ற தென்பானும் இருக்கின் றானே ”

—பாண்டியன் பரிசு.



" ஆற்ற நல்லறம் அல்லது இலாமையால்
ஏற்றம் அன்றி இழித்தகவு இல்லையே "

கம்பராமாயணம், பாலகாண்டம்—நாட்டுப்படலம்.

# அமைதி... நிலவ!

அமைதி துறவிக்கு மட்டும் வேண்டிய ஒன்றல்ல. ஆரவாரத்திலேயே எந்நேரமும் மூழ்கிக் கிடக்கும் மனிதனுக்கும் சிறிது நேரமாவது அமைதி தேவைப்படத் தான் செய்கின்றது. நிலம் கொழிக்கினும், நீர் பெருகினும், நலஞ் சிறக்கினும், நாடு உயரினும், தொழில் வளரினும், தாழ்வு அகலினும், அறிவு வளருவதற்கும் எல்லோரும்கூடி இன்புற்றிருப்பதற்கும் அமைதி கட்டாயம் வேண்டும். அமைதி யற்ற வாழ்வு கொடியபாலை; வெறுக்கத்தக்க இடுகாடு.

அமைதியான வாழ்க்கைக்கு வேண்டியன பலவுண்டு. வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்வளம் வற்றாமல் இருக்கு மானால் ஓரளவு அமைதி நிலவும். அவை பற்றி பல தலைப்பு களில் முன்னரே கூறினோம். எஞ்சிய ஒரு சிலவற்றை மட்டும் இங்கு காணுவோம்.

வேலையின்மையால் ஓயாமல் அலைந்து அலைந்து கால லுத்துப் போகும் மனிதன் முதலில் எங்கேனும் வேலை பெற்று உட்கார வாய்ப்பு ஏற்படவேண்டும். யாவருக்கும்

அத்தகைய வாய்ப்பு ஏற்படுகின்ற வரையில் முழு அமைதிக்கு வழியில்லை. ஒவ்வொரு மாவட்டத்திலும் வேலை தேடித் தரும் அமைப்புகள் தங்களால் இயன்றதைச் செய்கின்றன. எனினும் அவைகளால் வேலையைத் தேடித் தர முடியுமேயன்றி உண்டாக்கித் தர முடியாது. பானையிலிருந்தால் ஆக்கிப் படைக்கத் தயார். பானையே காலியாக இருக்கும் போது ? பல ஓராசிரியப் பள்ளிகள், சிறு தொழில்கள், இவற்றால் கடந்த ஐந்தாண்டுகளில் ஓரளவு வேலையின்மை போக்கப்பட்டிருக்கிறது. மதுரையிலுள்ள வேலை தேடித்தரும் அமைப்பின் விவரம் கீழே தரப்பட்டுள்ளது :—

| | | பதிவுசெய்தோர் | வேலைபெற்றோர். |
|---|---|---|---|
| 1951 | .. | 8,537 | 1,467 |
| 1952 | .. | 9,260 | 1,306 |
| 1953 | .. | 9,827 | 1,572 |
| 1954 | .. | 10.868 | 1,479 |
| 1955 | .. | 11,790 | 1,851 |

மனிதனின் அமைதியைக் குலைப்பதில் இயற்கையும் அவ்வப்போது பங்கு கொள்வதுண்டு. அதில் ஒன்றுதான் அண்மையில் வீசிய புயல். மேலூர், திருமங்கலம் வட்டங்களில் சுமார் 941 ஏக்கர் நீரறித்த நிலம் வளமாக்கப்பட்டது. இருபத்தியொரு டன் எண்பத்தாரு பவுண்டு அம்மோனியம் ஸல்பேட்டு அந்நிலங்களுக்கு எருவாகத் தரப்பட்டுள்ளது. மற்றும் உடமை இழந்த மக்களுக்கு, மக்களும் மக்கள் மன்றமுமாகச் சேர்ந்து ஆற்றிய தொண்டுகள், மிகச் சிறப்புடையனவாகும்.

நெருப்பின் கொடுமை நினைக்கவே முடியாத ஒன்று. அது ஒரு பொழுதில், அமைதியாகக் கலைக்கப்பற்று வாழ்ந்த ஆயிரக்கணக்கான குடும்பங்களை நடுத்தெருவில் நிற்கவைத்து வேடிக்கை பார்த்துவிடும் வன்மை படைத்தது. அதன் அழிவை எதிர்த்து மனித மூளை உண்டாக்கியதுதான் நெருப்

பணைக்கும் யந்திரம். மதுரை மாவட்டத்தில் திண்டுக்கல், பழனி, போடிநாய்க்கனூர், பெரியகுளம் ஆகிய இடங்களில் நெருப்பணைக்கும் யந்திரங்கள் நிறுத்தப்பட்டிருக்கின்றன.

குடியிருப்பு, யாவற்றிலும் மிகச் சிறப்பான ஒன்றாகும். எத்தனைதான் இருந்தாலும் தனக்கென்று ஒரு வீடு இல்லா விட்டால் மனித மனம் நிறைவு பெறாது. அமைதியுடன் வாழ அதனால் இயலாது. திருக்குறளில் ஒரு சுவையான பாட்டு இதைப்பற்றிக் கூறுகிறது. தன் காதலியைத் தழுவுவதில் பெறும் இன்பத்திற்கு ஒரு காதலன் உவமை கூறுகிறான். தன்னுடைய வீட்டிலேயிருந்து தான் ஈட்டிய பொருளைப் பகிர்ந்து உண்ணுவது போல அது இருக்குமாம். தன் உழைப் பால் ஈட்டிய பொருளைப் பிறரோடு பகிர்ந்து உண்பதிலே மட்டும் முழு இன்பமில்லை. அதைத் தன்னுடைய வீட்டிலே யிருந்து உண்ண வேண்டும் என்கிறார் வள்ளுவர்.

மதுரை மாவட்டத்தில் இரண்டு மனையெழுப்பித் தரும் கழகங்களும், ஒரு நாட்டுப்புற மனையெழுப்பும் கழகமும் ஆரம்பிசகப்பட்டன. பண்ணைக்காடு, தேனி ஆகிய இடங்களி லும் புதுப்பட்டியிலும் இவையிருக்கின்றன. திட்டத்தின் தொடக்ககாலத்தில் இத்தகைய கழகங்கள் ஏழு இருந்தன. இப்பொழுது பத்து இருக்கின்றன.

பழனி, சின்னமனூர், போடிநாய்க்கனூர், கோடைக் கானல் ஆகிய வற்றிலுள்ள மனையெழுப்பும் கழகங்கள் 198 மனைகளை எழுப்பித் தந்துள்ளன.

பண்ணைக்காடு திண்டுக்கல் ஆகிய இடங்களிலுள்ள கழ கங்கள் 1954–55 ஆம் ஆண்டு முடிய 30 மனைகளைக் கட்டி யுள்ளன.

புதுப்பட்டியிலுள்ள நாட்டுப்புற மனையெழுப்புக் கழகம், இதுவரையில் நான்கு வீடுகளைக் கட்டியுள்ளது.



" பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து "

—திருக்குறள்.

# நலம் . . .
# சிறக்க !

---

நிலத்தாலும் நீராலும் உண்டி சிறக்கலாம்; ஊன் பெருகலாம். ஆனால் அந்நிலையிலும் வாழ்வில் வளம் குறைந்து இருக்கலாம்; நலங்குன்றிய இல்லங்கள் நாட்டில் நலிந்து கிடந்தாலும் வியப்படைதற்கு இல்லை. உண்டியின் தூய்மை கெடினும் அல்லது அதன் அளவு மிகினும், அது உடலுக்கு பொருந்தாத தாகின்ற நிலையிலும், அந்த உண்டியே இந்தப் பிண்டத்தைப் பாதித்து விடுமல்லவா? நீர் அதைக் காட்டிலும் இடர்தருவது. ஒரு குறிப்பிட்ட ஊரின் நீரையே பருகிப் பழகியவன் உடல் நிலை, மற்றொரு ஊரின் நீரைப் பருகுவதால்கூடக் கெடக் காண்கிறோம். நீரிலே கிருமிகள் கலந்து விட்டாலோ சொல்லவே வேண்டுவதில்லை. நீர், உண்டி, சுற்றுப்புறம் இவற்றில் தூய்மையின்றி, சற்றும் விழிப்பில்லாமல் நாம் உறங்கிக்கொண்டிருந்தாலோ தொத்துநோயின் தலைவிரியாட்டம் தொடங்கிவிடும். எனவே நல்ல உணவாலும் உடையாலும் மட்டும் நலம் சிறந்துவிடாது. சுகாதாரமும் மருத்துவமும் அதனினும் முக்கியமானவை.

## சுகாதாரம்

நோயற்ற வாழ்விலுள்ள இன்பமும் வளமும் வாழப் பிறந்த ஒவ்வொருவனுக்கும் தெரிந்ததான் உள்ளது. யாவரும் உணர்ந்த உணர்வு ஒன்றிற்றத்தான், நாவன்மை படைத்த ஔவை, 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' எனச் சொல்லுருவம் அமைத்தாள். இருந்தும் ஏன் மக்கள் நோய்வாய் படுகின்றனர் ? இதற்கு விடை எளிது. தடுக்கும் வகை அவர்களுக்குத் தெரியாது. தெரிந்த ஒரு சிலருக்கும் அதற்குப் போதிய சூழ்நிலை அமைவதில்லை. நம் சுகாதார இலாகா இத்துறையில் பெருந்தொண்டு புரிந்துள்ளது.

பிணி வருதற்குரிய மூலகாரணங்களை ஆராய்ந்து அதனைத் தடுப்பது ; மக்களுக்கு அதுபற்றி எடுத்துக்கூறி அவர்களின் கடமையை நினைவூட்டுவது, ஆகிய செயல்களில் இந்த இலாகா சென்ற ஐந்தாண்டுகளிலும் விரைந்து தொண்டாற்றி யுள்ளது.

பல இடங்களில் குடிநீர் வசதிகள் செய்துதரப்பட்டுள்ளன. இந்த மாவட்டத்தில் 162 பழைய கிணறுகள் செப்பனிடப் பட்டுள்ளன. திருமங்கலம் வட்டத்தில் மட்டும் 112 புதுக் கிணறு கள் தோண்டப்பட்டுள்ளன. 60 மலக்கழிவிடங்கள் கட்டித் தரப்பட்டன. மேலும், ஆண் பெண் குளிப்பதற்குச் சுமார் 70 குளிப்பறைகள் கட்டப்பட்டுள்ளன. நோய் பரவுவதைத் தடுக்கவேண்டுமானால், நீரின் தூய்மைக்கே முதலில் கவனம் செலுத்தவேண்டும். எனவேதான் மேற்கண்ட முயற்சிகள் எடுக்கப்பட்டன.

**வாடிப்பட்டி**—இவ்வூரில் 5,000 கேலன் கொள்ளளவு உடைய தொட்டியொன்று, 36 அடித் தொட்டி தாங்கியின் மீது வைக்கப்பட்டுள்ளது. ஊர் முழுவதற்கும் நீரைக் கொண்டு

தரும் பணியை, தொட்டியிலிருந்து கிளம்பும் பத்து பெரிய குழாய்கள் மேற்கொள்ளும். இதற்காகும் செலவு 26,000 ரூபாயாகும். இதன் மூலம் 3,500 மக்கள் பலனடைவர்.

இத்திட்டம் முடியும் தருவாயிலிருக்கிறது. மூன்று பர்லாங்குத் தொலைவு சென்று ஆற்றிலிருந்து நீர் முகந்து வந்த மக்கள், ஆவலோடு இதனை எதிர்நோக்கினர். இதற்காகிய செலவில் நூற்றுக்கு 12½ பங்குத் தொகையை மக்களே மனமுவந்து அளித்துள்ளனர்.

**கோச்சடை**—ரூபாய் 20,000 செலவில் குடிநீர்த் திட்டம் ஒன்று இங்கு முடிவுற்றுள்ளது. இதனால் 4,000 மக்கள் பயனடைந்தனர். 26 அடி ஆழத்திற்கு ஒரு கிணறு தோண்டப் பட்டுள்ளது. அந்த நீரைக்கொண்டு ஒன்பது இடங்களில் குழாய்கள் அமைத்துள்ளனர்.

ஊர் மன்றமும் மக்களுமாகச் சேர்ந்து ரூ 6,141-ஐ இதற்கு உதவினர்.

**அல்லிநகரம்**—ஏழாயிரம் மக்களைக் கொண்ட இவ் வூருக்கு ஒரே ஒரு ஊருணிதான் இருந்தது. அதுவும் 1,000 அடிகளுக்கு அப்பால் இருந்தது. எனவே அங்கு 8,000 கேலன் கொள்ளக்கூடிய தொட்டி ஒன்று தரைமட்டத்தில் கட்டப்பட்டுள்ளது. இதற்கான செலவு ரூ. 18,000. இதில் பாதியை ஊர்மன்றமும் மக்களும் ஏற்றுக் கொண்டனர்.

**பட்டிவீரன்பட்டி**—ஐயாயிரம் மக்களையுடையது இவ்வூர். இங்கு எழும்பியுள்ள குளிக்கும் அறை கண்ணடி உட்பட புதிய வசதிகள் அனைத்தையும் கொண்டதாக இருக்கிறது. இதற்காகிய செலவு எட்டாயிரம் ரூபாயில், கால்பங்கை உள்ளூர் மக்களே அளித்தனர். இன்னும் கால் பங்கினை ஊர் மன்றம் நல்கியது.



இறைப்புக்குழாயும் குளிப்பறையும்—பட்டிவீரன்பட்டி.

**சேவகம்பட்டி**—இரண்டாயிரம் மக்களையுடைய இச்சிற்றூரில், ஊருணி ஒன்றுகூட அருகாமையில் இல்லை. 1,000 அடி நடந்து சென்றே நீரைக் கொணரவேண்டும். எனவே இங்கு ரூ. 10,000 செலவில் ஒரு திட்டத்தைச் செயல்படுத்தி வருகின்றனர்.

தொலைவிலுள்ள கிணற்றிலிருந்து குழாய் மூலம், ஊர் நடுவண் உள்ள தொட்டியில் நீரைத் தேக்குகின்றனர். மக்கள் அங்கு வந்து நீரெடுத்துச் செல்வர். இங்கும் பாதிச் செலவை மக்களே ஏற்றுக் கொண்டனர்.

**கோவிந்தநகரம்**—வைகைக் கரையிலே அமைந்துள்ள இவ்வழகிய ஊரின் மாந்தர், வைகை ஆற்றிலிருந்து கிடைக்கும் ஊற்று நீரைக் குடிக்கப் பயன் படுத்துகின்றனர். ரூபாய் 26,000 செலவில் இங்கு அமைக்கப்பட்டுள்ள நீர்த்திட்டம் இப்பொழுது நல்ல பயன் தந்து வருகிறது. ஆற்றடியில் ஒரு

புதுக்குளம் ; அதனை இறைக்கக் குழாய் ; உயர்ந்த இடத்தில் நீரைத் தேக்கத் தொட்டி ; நீரைக் கொண்டு செல்லக் குழாய்கள் ; ஆகிய யாவும் இங்கு அமைந்துள்ளன. பத்தொன்பது குழாய்கள் ஊரெங்கும் அமைக்கப்பட்டுள்ளன. இதற்கான செலவில் பாதி மக்களுடையதே. மக்கள் தொகை 4,500.

அம்பாசமுத்திரம்—ரூபாய் 15,000 செலவில் உருவாகும் குடிநீர்த் திட்டமொன்று இங்கு முடியும் தருவாயில் உள்ளது. தொட்டி தாங்கியின்மீது தொட்டியமைத்து நீர் தேக்கப்படும். ஊருக்குள் 12 குழாய்கள் அமைக்கப்படும். இங்கும் பாதித் தொகையை மக்களே உதவியுள்ளனர்.

ஐயமங்கலம்—2,000 மக்களைக் கொண்ட இவ்வூருக்கு ரூ. 10,000 செலவில் குடிநீர்த் தொட்டி அமைக்கப்பட்டு வருகிறது. ஊர் மன்றமும் மக்களுமாகப் பாதித் தொகையை அளிப்பர். தொட்டியிலேயே 12 குழாய்கள் அமைக்கப்படும். இது முடியும் தருவாயிலுள்ளது.

பூடிப்புரம்—பூடிப்புரம் ஊர்மன்றம், பூடிப்புரம் மஞ்சு நாய்க்கன்பட்டி ஆகிய இரு ஊர்களையும் உள்ளடிக்கியதாகும். இரண்டுக்கும் பொதுவான குடிநீர்த் திட்டமொன்று ரூ. 28,000 செலவில் இங்கு வகுக்கப்பட்டுள்ளது. இது கோவிந்தபுரத்தின் குடிநீர் அமைப்பைப் போன்றதே.

செலவில் நூற்றுக்கு 25 பங்கிற்கு ஊர்மக்கள் பொறுப் பேற்றுள்ளனர்.

இராமனுதபுரம் ஊர்க்காப்பாளர் மறுகில் (Police Reserve Line) குடிநீர்த் திட்டம் ஒன்று அமைக்கப்பட இருக்கின்றது. இதற்காகும் செலவு ரூ. 15,000. பிற மக்களுக்கும் இது பலன் அளிக்கும். எனவே நூற்றுக்கு முப்பது பங்கு செலவை மக்களும் காப்பாளருமாகக் கலந்து அளித்து விட்டனர். மறுகெங்கும் 15 குழாய்கள் அமைக்கப்படும்.

இம்மாவட்டத்தில் கடந்த ஐந்தாண்டுகளில் மேற்கொள்ளப் பட்ட குடி நீர்த்திட்டங்கள் 41. இவற்றிற்காகச் செலவிட்ட தொகை 4,63,905 ரூபாயாகும். இப்பணிகள் யாவும் நாட்டுப் புற மக்களால் மகிழ்ச்சியுடன் வரவேற்கப்பட்டன.

கம்பம் சாரலில் குடி தண்ணீர் வசதி மிகக் கேடாக இருந்து வந்தது. அங்குள்ள பகுதிகளில் காலரா ஆண்டுக் கொரு முறை தன் தலையைக் காட்டுவது வழக்கம். இத்துன்ப நிலை யைப் போக்க ரூ. 44 லட்சம் செலவில் ஒரு குடி நீர்த்திட்டம் அமைய விருக்கின்றது. அது ஒன்பது ஊர் மன்றங்களுக்குப் போதிய நீர்வசதி எப்பொழுதும் கிடைக்குமாறு செய்யும்.

தாண்டிக்குடி நீர்த்திட்டம் அரசாங்கத்தின் மற்றொரு நல்ல திட்டமாகும். ரூபாய் 45,000 செலவில் மலை முகட்டில் அமைந் துள்ள ஊர் இதனால் நீர்வசதி பெறும்.

இம் மாவட்டத்தின் இரண்டாவது பெரிய நகரமான திண்டுக்கல்லின் தண்ணீர்த் திண்டாட்டம் தமிழகம் அறிந்தது. இங்கு பல முயற்சிகள் மேற்கொள்ளப்படுவதும் கைவிடப்படுவது மாக இருந்தது. இறுதியில் முதலாம் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில்தான் அதற்கு வழி பிறந்தது. திண்டுக்கல் குடி நீர்த் திட்டத்திற்காக ரூ. 89·97 லட்சம் ஒதுக்கப்பட் டுள்ளது. 1955-ம் ஞு ஜூலை மீ 3உ அதற்கான கல்நாட்டு விழா, சென்னை மாநிலக் கவர்னர் பிரகாசா அவர்களால் நடத்திவைக்கப்பட்டது.

குடி நீருக்காகப் பெரும் திட்டங்களைப் போட்டு நிறைவேற்று வதோடு அமைந்துவிட முடியாது. கழிவுநீர் ஓரிடத்தில் தேங்கி நிற்பது எவ்வளவு கெடுதி பயப்பது என்பது, எல்லோ ருக்கும் தெரியும். எனவே கழிவுநீரைப் போக்குவதற்கான கழிவாய்கள் பல அமைக்கப்பட்டன. திருமங்கலம் வட்டத்தில் மட்டும் சுமார் 42,000 கஜ நீளத்திற்குக் கழிகால் வெட்டப்பட் டுள்ளது. இதனால் 20 கிராமங்கள் பயனடைந்துள்ளன.

திருமங்கலம் வட்டத்தில் 48 மலக் கழிவிடங்கள் கட்டப்பட்டுள்ளன. மலக்கழிவிடங்களின் இன்றியமையாமையை மக்களிடம் வலியுறுத்தியதன் பயனாக, ஊர்ப் புறங்களில் பல வீடுகளில் இன்று மலக்கழிவிடங்கள் அமைக்கின்றனர். குடி தண்ணீர், மலக்கழிவிடம் இவ்விரண்டிலும் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தால் திண்டுக்கல், பழனி வட்டங்களில் பரவியிருந்த நரப்புச் சிலந்திநோய் குறைந்துள்ளது குறிப்பிடத் தக்கது. திருமங்கலம் வட்டத்தில் 65 குளிக்கும் அறைகள் உள்ளன.

திட்டத்தின் தொடக்க காலத்தில் ஆறு நகராட்சி மன்றங்களும், ஊராட்சி மன்றம் ஒன்றுமே குடிநீர் வசதி பெற்றிருந்தன. அவையாவன :—மதுரை, திண்டுக்கல், பெரியகுளம், கோடைக்கானல், பழனி, போடிநாய்க்கனூர் ஆகிய நகரங்களும், பத்தலகுண்டு என்னும் ஊருமாகும்.

திண்டுக்கல்லுக்குப் பெரிய திட்டம் போடப்பட்டு வேலை நடந்து வருவது முன்னரே குறிப்பிடப்பட்டது. மதுரைக்கும் நீர்த் திட்டம் விரிவாக்கப்பட்டுள்ளது. ரூபாய் 23·6 லட்சம் அதற்கு ஒதுக்கப்பட்டுள்ளது.

மதுரை நகரில் கழிநீர்க் கால்களைச் (drainage) செப்பனிட்டு ஒழுங்குபடுத்த விருக்கின்றனர். புதைகழிவாய்த் திட்டம் ஒன்று (underground drainage scheme) செயல் பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

## மருத்துவம்

சுற்றுப்புறத்தைத் தூய்மைப்படுத்துதல், கிருமிகளை அழித்தல், குடிக்கவும் குளிக்கவும் தூய நீர் கிடைக்கும்படி செய்தல், கழிவு நீர் தேங்கி யழுகாவண்ணம் ஏற்ற கழிவு நீர்க் கால்கள் அமைத்தல், குளிப்பறைகளும், மலக்கழிவிடங்களும் கட்டித்தருதல், ஆகிய பணிகள், பிணியைத் தடுப்பதற்

வேண்டிய, இன்றியமையாத முன்னெச்சரிக்கைகளாகும். இவை அனைத்தும் இருந்தும் நோய் வரலாம். பொருந்திய உணவைப் போதிய அளவு கொள்ளாமை, அதிக உழைப்பு, வறுமை ஆகிய எத்தனையோ காரணங்களால் மனிதன் நோய்வாய்ப் படுகிறன். எனவே மருத்துவமும் நாட்டின் நல் வாழ்வுக்கு இன்றியமையாது வேண்டப்படும் ஒன்ரு கின்றது.

**தொத்து நோய் விடுதி**—தொத்து நோய் மிகப்பொல்லாத ஒன்று. மதுரையில் தொத்து நோய் மருத்துவ விடுதி கட்டுவதற்கு 1955–ல் அரசாங்கம் அனுமதியளித்தது. ரூபாய் 7,79,500 அதற்காக ஒதுக்கப்பட்டுள்ளது. வைகை யாற்றின் வடகரையில், மதுரை நகரின் மேற்குக் கோடியில், மருத்துவ நிலையம் கட்டுவதற்கான நிலம் வாங்கப்பட்டுள்ளது. நிலத்திற்கான தொகை ரூ. 87,336. வேலைகள் விரைவாக நடந்தேறி வருகின்றன.

**எர்ஸ்கின் விடுதி**—எர்ஸ்கினி மருத்துவ விடுதியை விரிவு படுத்துவதற்காக, இந்த ஆண்டுத் துவக்கத்தில் 57,30,000 ரூபாய் ஒதுக்கப்பட்டது. நோயாளர் பகுதியில் வேலை நடந்து கொண்டிருக்கிறது. 'அறுவைச்சாலை' (operation Theatre) 'மருத்துவ மனை' (maternity block) ஆகியவற்றிற்கான கட்டிட வேலைகள் விரைவில் தொடங்கப்படும். குட்டநோய் மருத்துவப் பகுதியொன்று இங்கு கட்டப்பட்டுள்ளது. அதற் காகியுள்ள செலவு ரூ. 16,000-தில் உள்ளூர் வளர்ச்சித் திட்டத் தின்கீழ் 50 விழுக்காடும் எஞ்சிய பகுதி ஹிந்த குஷ்ட் நிவாரண நிதியி லிருந்தும், அளிக்கப்பட்டது.

இந்த மாவட்டத்தில் மேலும் பல குறிப்பிடத்தக்க முயற்சி கள் சென்ற ஐந்து ஆண்டுகளில் மேற்கொள்ளப்பட்டிருக் கின்றன. அவற்றின் விவரங்களைச் சுருக்கமாகக் கீழே தருகிறோம் :

சமூகநலத்திட்டத்தின்கீழ் வாடிப்பட்டி, வெள்ளாளூர், கல்லாந்திரி ஆகிய இடங்களில் மூன்று சுகாதாரத் தலைமை நிலையங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இம் மூன்றும் முறையே நீலக்கோட்டை, மேலூர், மதுரை ஆகிய வட்டங்களில் அமைந்திருக்கின்றன. நாள்தோறும் சுமார் 300 பிணியாளர்கள் இங்கு மருத்துவம் பெறுகின்றனர்.

சமூக வளர்ச்சித் திட்டத்தின் கீழ் திண்டுக்கல் வட்டத்திலுள்ள ஆத்தூர்க் கோட்டத்தில் (firka), சின்னாளப்பட்டி என்னுமிடத்தில், ஒரு சுகாதாரத் தலைமை நிலையம் அமைக்கப் பட்டுள்ளது.

நோயாளியின் வீடு தேடி.....





ஊசிகுத்தும் மருத்துவருக்குக் கோபம் நம்மீதில்லை !—நோய்மீதுதான்!

ஆத்தூரில் அரசாங்க மருத்துவச் சாலை ஒன்று திறக்கப்பட்டுள்ளது.

தேசீய வளர்ச்சிப் பணியின்கீழ், திருமங்கலம் வட்டாரத்திலுள்ள (Block) செக்கானூரணியில், ஒரு சுகாதாரத் தலைமை நிலையம் திறக்கப்பட்டு, நன்கு பணியாற்றி வருகின்றது. இந்த வட்டாரத்திலுள்ள ஊர்களுக்கு மருந்து தந்து உதவுவதற்காக, எல்லாவசதிகளோடும் கூடிய ஜீப் ஒன்று இதனோடு இணைக்கப்பட்டிருக்கின்றது. இது இடம் மாறும் நிலையமாக இருந்து தொண்டாற்றி வருகின்றது.

**மருத்துவக் கல்லூரி**—இம் மாவட்டத்தில் நடந்த குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளுள், மதுரையில் தொடங்கப்பட்ட மருத்

துவக் கல்லூரி ஒன்றுகும். ஐம்பது மாணவர் எம்.பி.பி.எஸ். பயிற்சிக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றனர். இதற்கு ஒதுக்கப் பட்டுள்ள தொகை ரூ. 44·20 லட்சமாகும்.

**பொல்லாத நோய்கள் : மலேரியா**—இம் மாவட்டத்தி லுள்ள மலைப்பகுதிகளில் மலேரியா மிகுதி. இதன் காரண மாகத் தேயிலை, ஏலக்காய்த் தோட்டத் தொழிலாளர் பெரிதும் இடர்ப்பட்டனர். மலேரியாவின் கடுமையால், இப் பகுதிகளில் வேலைக்கு ஆட்கள் கிடைப்பதே அருமையாக இருந்தது. ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் வத்தலக் குண்டில் அமைக்கப் பட்ட மலேரியாத் தடுப்புக் கிளை மருந்தகத்தின் தளராத முயற்சியால், இன்று மலேரியா அங்கு அடியோடு ஒழிக்கப்பட் டிருக்கிறது- கண்டமனூருக்கு அருகே பாழடைந்து கொண் டிருந்த பல ஊர்கள், இன்று மீண்டும் மக்கள் நடமாட்டத் துடன் உயிர் பெற்றுத் திகழ்கின்றன.

**குட்டம்**—மற்றொரு கொடிய நோய் குட்டம். நினைத் தாலே நெஞ்சை நடுங்கச் செய்யும் இப் பொல்லாத நோய், மதுரை மாவட்டத்தில் நூற்றுக்கு நான்கைந்து பேருக்குப் பரவியிருக்கிறது. திண்டுக்கல், மதுரை, மேலூர், திருமங்க லம் வட்டங்களில் இப் பிணி மிகுதி. இதற்கு மருத்துவம் செய்ய திருமங்கலம், கல்லுப்பட்டி, உசிலம்பட்டி ஆகிய இடங் களில் நிலயங்களைத் திறந்துள்ளனர்.

கல்லுப்பட்டி, குன்னத்தூர், பெரயூர், சுப்பளாபுரம் ஆகிய நான்கு ஊர்களுக்கும் நடுநிலையமாகக் கல்லுப்பட்டி அமைந் திருக்கிறது.

செங்கபடை, வில்லூர் ஆகிய ஊர்களுக்கு இடையே, திருமங்க லத்தின் நிலையம் உள்ளது.

காந்தி கிராமம் பகுதியைச் சேர்ந்த செம்பட்டியில், அரசாங் கக் குட்ட நோய் மருந்து நிலையம் ஒன்றுள்ளது. அங்குள்ள

மருத்துவர், சுற்றுப்புற ஊர்களை ஆராய்வதும், அங்குள்ளோருக்கு மருத்துவம் செய்வதும், ஆகிய கடமைகளையும், மேற்கொண்டிருக்கின்றார்.

குட்டநோயின் தன்மைகளை மக்களுக்குக் கூட்டங்கள் போட்டு விளக்கிச் சொல்வது ; படங்கள் மூலம் தெளிவுறுத்துவது ; ஆகிய வேலைகளையும், தடுப்பு வகைகளை மக்களுக்கு அறிவுறுத்தும் பணிகளையும் செய்வதற்காக, ஒரு வண்டி வாங்கப்பட்டுள்ளது. அது ஊர் ஊராகச் சென்று தன் கடமையைச் செய்து வருகிறது.

சமூக நலத்திட்டத்தின்கீழ், காந்தி கிராமத்தில், பாலமேடு, வாடிப்பட்டி, வெள்ளாளூர், கல்லாந்திரி ஆகிய ஊர்கள் குட்டநோய் போக்குவதற்கான பகுதிகளாகத் தெரிந்தெடுக்கப்பட்டுள்ளன.

**ஏனைய மருந்தகங்கள்**—வட்டத் தலைமை மருத்துவ விடுதிகள் விரிவுபடுத்தப் பட்டுள்ளன. கோடைக்கானலிலுள்ள மருத்துவ மனையை விரிவுபடுத்தி உள்ளனர். அதற்கான செலவு 24,900 ரூபாயாகும். திண்டுக்கல்லிலுள்ள அரசாங்க மருத்துவ விடுதியில், இரு செவிலிவர் மறுகு (nurses quarters) அமைக்கப்பட்டுள்ளது. ரூபாய் 18,000 அதற்காகச் செலவாகியுள்ளது.

நகராட்சி மன்றத்தால் நடத்தப்பட்டுவந்த போடிநாயக்கனூர் மருத்துவ விடுதியை, மாநில அரசாங்கம் எடுத்துக் கொண்டது. அவ்வாறே உள்ளூர் நிதியில் (local fund hospital) நடந்துவந்த மேலூர் மருத்துவ விடுதியும் மாநிலத்திற்குச் சொந்தமாயிற்று.

மதுரையிலுள்ள எர்ஸ்கின் மருத்துவப் பயிற்சி நிலையத்தில் ஓர் ஆண்டில் 72 மருத்துவ மனை உதவியாளர் (maternity assistants) பயிற்சி பெறுகின்றனர். சமயநல்லூரிலும்

கூடலூரிலும் இரண்டு மருந்தகங்கள் (dispensaries) திறக்கப்பட்டிருக்கின்றன. வைகைத் திட்டத்தில் ஈடுபட்டுள்ள உழைப்பாளரின் நலன் கருதி அங்கு ஒரு மருத்துவ இல்லம் திறந்து, மருத்துவரை நியமிக்க ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன.

**மழலைப்பேறு.**—மழலை ஒலியால் ஒரு தாய் பெறும் மட்டற்ற மகிழ்ச்சி, எளிதிலே அவளுக்குக் கிடைக்கும் ஒன்றல்ல. இன்பமும் துன்பமும் கலந்திருப்பதே உலக இயற்கை. பெண் மட்டும் அதற்கு விதிவிலக்கா என்ன ? பின்னால் ஒரு தாய் அடையப்போகும் களிப்பிற்கு, முன்கூட்டியே அவளிடம் ஈடு கேட்கிறது இயற்கை. பிள்ளைப்பேறு ஒவ்வொரு மகளின் வாழ்விலும் ஒரு கண்டம் என்பதை அறியாதவரில்லை. அதன் விளைவாக உயிர்விடுவோர் தொகையும் இந்திய நாட்டில் மிகுதி. மனித இனத்தின் தோற்றத்தாயை, அச் செயலிலேயே மாள விடுவது, கொடுமையிலும் கொடுமை.

இக் கேட்டினைப் போக்கும் முயற்சியில் மருத்துவத்துறை சென்ற ஐந்தாண்டுகளில் பெரு வெற்றி பெற்றுள்ளது.

ஐந்தாண்டுத் திட்டம் செயல்படுவதற்கு முன், மதுரை மாவட்டத்தில் 18 மருத்துவ மனைகள் இருந்தன. இவற்றை மாவட்ட ஆட்சி மன்றம் கண்காணித்து வந்தது. திட்ட காலத்தில் இம் மாவட்டத்தில் 30 குழந்தை பெறுமில்லங்கள் புதிதாகத் திறக்கப்பட்டன. நான்கு இல்லங்களுக்கு, ஒரு மருத்துமனை மேனியில் உள்ளது. சிறந்த பயிற்சிபெற்ற மருத்துவர் அவ்விடங்களில் நியமிக்கப்பட்டுள்ளனர். இத்தகைய தாய்சேய் நல விடுதிகள், தங்கள் ஊரிலும் நிறுவப்பட வேண்டுமென்பதில், ஒவ்வொரு ஊராரும் ஆர்வம் கொண்டுள்ளதை அரசாங்கம் வரவேற்கிறது. இன்னும் விரைந்து செயல் படவே அரசாங்கம் விரும்புகின்றது. மக்களின் ஒத்துழைப்பும், தளரா ஊக்கமுமே வெற்றிக்கு அடிப்படை.


எல்லோரும் கூடி...
இன்புற்றிருக்க!

“ திங்கள்மும் மாரிபெய்க ! திருவறம் வளர்க ! செங்கோல்
நன்னெறி தரச னாள்க ! நாடெலாம் விளைக !—மற்றும்
எங்குள அறத்தினோரும் இனிதூழி வாழ்க ! . . . .”

# எல்லோரும் கூடி இன்புற்றிருக்க!

## கூட்டுறவுச் சங்கங்கள்

'ஒன்றுபட்டாலுண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே'

என்று பாரதி கூறினார். நம் நிலையை உணர்ந்துதான் இவ்வாறு கூறினார்; இசையோடு கலந்து பாடுவதற்காக அல்ல. ஒற்றுமை யின்றிப் பாழாகும் மனித இனம், எல்லாத் துறையிலும் பிற்போக்கில் தாழ்வுற்று நிற்கும் நிலை கண்டார்; நெஞ்சுருகினார்; உளங்கசிந்து இந்த அறிவுரையைத் தந்தார். ஒன்றுபட்டு பணியாற்றுவதன் மூலம் ஏற்படும் நற்பயன்கள் எல்லையற்றன. பண்டைய மக்களும் ஒருவாறு இதை அறிந்துதான் இருந்தார்கள். பல வணிகர்கள் ஒன்று கூடி வாணிபம் செய்து வந்ததை, மிகப்பழங்காலத் தமிழிலக்கியங்களிலிருந்து குறிப்பாகவும், பிற்காலக் கல்வெட்டுக்களிலிருந்து வெளிப்படையாகவும், அறிகின்றோம். ஊர் மன்றங்களிலும், பிற அமைப்புக்களிலும், அன்றைய மக்களின் கூட்டுறவு நெறி ஓரளவு புலனாகின்றது.

மக்களாட்சியில், கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சிக்குப் பல வகையிலும் வழிவகுத்துத் தரப்பட்டது. வியக்கத்தக்க

அளவில் இன்று நாடெங்கும் கூட்டுறவுச் சங்கங்கள் வேலை செய்து வருகின்றன. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில், கூட்டுறவு இயக்கத்திற்காக, நமது மாநிலம் 17 லட்சம் ரூபாயைச் செலவிட இருந்தது. 11 லட்சம் ரூபாயே இதுவரை செலவழிந்துள்ளது. எனினும் வளர்ச்சி போற்றத்தக்கது என்றுதான் கூறவேண்டும்.

இம் மாவட்டத்தில், கூட்டுறவின் கீழ் சென்ற ஐந்து ஆண்டுகளில் நடந்தேறிய செயல்களைக்காணுவோம். கூட்டுறவு இயக்கத்தைப் பொறுத்தமட்டில் இந்த மாவட்டம், மாநிலத்தில் முதலிடத்தைப் பெறுகின்றது என்று ஐயமின்றிக் கூறலாம்.

மதுரைச் சரகத்திலுள்ள கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை 866 ஆகும். இதிலடங்கிய நான்கு வட்டங்களிலும், நான்கு நில அடமான வங்கிகள் உள்ளன. மதுரை மாவட்டத் தலைமை கூட்டுறவு வங்கி, இந்தச் சரகத்தில் உள்ள எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் பணவுதவி அளிக்கின்றது. இந்த வங்கியில் 1,272 உறுப்பினர் இருக்கின்றனர். இதில் செலுத்தப்பட்ட முதல் 11,38,327 ரூபாயாகும். இதன் நிலையான நிதி 6,25,545 ரூபாய். 1954–55-ஆம் ஆண்டில் இந்த வங்கிக்கு ரூ. 1,14,158 வருவாயாகக் கிடைத்துள்ளது. நெசவாளர் கூட்டுறவுப் பண்டகசாலைகள், கிராம நாணயச் சங்கங்கள் ஆகியவற்றிற்கும் இது பண உதவி செய்கின்றது.

**கிராம நாணயச் சங்கங்கள்**—மதுரைச் சரகத்தில் 549 கிராம நாணயச் சங்கங்கள் உள்ளன. உறுப்பினர் 37,357 பேர். இவர்களின் பங்குத் தொகை ரூ. 6,39,764. இந்தச் சங்கங்கள் கடனுகப் பெற்றுக்கொண்ட தொகை ரூ. 35,14,106. இவற்றுள் 414 கூட்டுறவுச் சங்கங்கள் வருவாயுடன் வேலை செய்தன. இவைகளுக்கு மொத்தம் 60,071 ரூபாய் லாபம் கிடைத்துள்ளது. சென்ற ஆண்டில் இந்தச் சரகத்தில், ஒத்தக்கடை என்ற ஊரில், கிராமக் கூட்டுறவு வங்கி ஒன்று தொடங்கப்பட்டது. இதில் 278 பேர் உறுப்பினராக உள்ளனர். இவர்



மாடு என்ற சொல்லுக்கே செல்வம் என்பதுதான் பொருள்

களின் பங்குத்தொகை ரூ. 34,569. இந்த வங்கி, உழவருக்குக் குறுகிய கால அளவுக் கடனுதவி யளித்து வருகிறது. இது வரை 2,26,756 ரூபாயை கடனாகத் தந்துள்ளது.

மதுரைச் சரகத்தில், ஹரிஜனங்களின் முன்னேற்றத்திற்காக மட்டும், 16 கிராம நாணயச் சங்கங்கள் உள்ளன. இவைகளில் உள்ள உறுப்பினர் 2,340 பேராவர். இவர்களின் பங்குத் தொகை ரூ. 45,650.

**கள்ளர் கூட்டுறவுச் சங்கம்**—மதுரைச் சரகத்தில், 195 கள்ளர் கூட்டுறவு நாணயச் சங்கங்கள் செயலாற்றி வருகின்றன. 8,925 உறுப்பினரும், ரூ. 68,725 பங்குத் தொகையும் கொண்டுள்ள இவைகளுக்குக் கள்ளர் பொது நல நிதியிலிருந்து பண உதவி தரப்படுகிறது. அரசாங்கமும் ரூ. 85,450 கடனாக உதவியுள்ளது.

**பால் தரும் சங்கங்கள்** (Milk supply unions)—மதுரைச் சரகத்தில், 36 பால் தரும் சங்கங்கள் பணிபுரிந்து வருகின்றன. இவற்றிலுள்ள உருப்பினர்கள் மாடுகள் வாங்குவதற்காகவும், அதன் மூலம் சங்கங்களுக்குத் துணைபுரிவதற்காகவும், அரசாங்கம் 44,000 ரூபாயைக் கடனுகக் கொடுத்துள்ளது. மதுரைநகரப் பால்தரும் சங்கத்தில், இவற்றிலுள்ள 30 சங்கங்கள் சேர்ந்துள்ளன. உறுப்பினர் தரும் பாலினை, மதுரைநகரப் பால்தரும் குழு, விற்பனை செய்கிறது. இது ஆண்டு தோறும் 633,000 படிக்கு மேலாக விற்பனை செய்கிறது. எஞ்சிய பால், தயிர், மோர், பால்கோவா, ஐஸ் கிரீம் முதலியவற்றிற்குப் பயன்பட்டுப் பணமாகின்றது. உறுப்பினர்கள் மாடுகளுக்குத் தீனிவாங்குவதற்காக முன்பணம் (fodder advance) பெறுகின்றனர். பால் கெட்டுப் போகாமல் இருப்பதற்காகச் சேமச்செப்பு (Pasteurization plant) ஒன்று மதுரையில் அமைக்கப்பட்டுள்ளது. இதற்காக அரசாங்கம் ரூ. 12,780 கடனுகக் கொடுத்துதவியது. வற்றுப்பால் பாது காப்புப் பண்ணையொன்று நிறுவுவதற்கான திட்டம், அரசாங்கத்தின் ஆராய்ச்சியிலுள்ளது.

**பண்டக சாலைகள்**—மதுரை-இராமனுதபுரம் தலைமைக் கூட்டுறவுப் பண்டகசாலையில், 372 உறுப்பினர் உள்ளனர். இவர்களின் பங்குத்தொகை 1,85,296. இதன் நல நிதி (க்ஷேம நிதி) ரூ. 5,31,050. ஆண்டு தோறும் 25 லட்சம் ரூபாய்க்கு இங்கு பண்டங்களைக் கொள்முதல் செய்து விற்கின்றனர்.

மதுரைச் சரகத்தில் 33 கூட்டுறவுப் பண்கடசாலைகள் உள்ளன. இவற்றில் 30,417 பேர் உறுப்பினராக உள்ளனர். பங்குத் தொகை ரூ. 6,18,429. இந்தப் பண்டகசாலைகள் 77,54,874 ரூபாய்க்குப் பண்டங்களை வாங்கி, 79,75,581 ரூபாய்க்கு விற்பனை செய்திருக்கின்றன. சில பண்டக சாலைகள் மருத்துவ விடுதிகளுக்கும், சிறைகளுக்கும், கல்வி யமைப்புகளுக்கும், பண்டங்கள் அளித்திருக்கின்றன.

மதுரைச் சரகத்தில் 6 மாணவர் பண்டகசாலைகள் இருப்பது குறிப்பிடத்தக்கது. 198 மாணவர் இவற்றில் உறுப்பினராக உள்ளனர். இவர்கள் பங்குத் தொகை ரூ. 458. இப்பண்டக சாலைகள் ரூ. 9,618 பெறுமான புத்தகங்களையும் பிறவற்றை யும் விற்றுள்ளன.

**நெசவாளர் கூட்டுறவுச் சங்கம்**—நம் மாநிலமெங்கும் புற்றீசல் போலக் கிளம்பிக் கொண்டிருப்பவை இச்சங்கங்களே. சென்ற ஐந்து ஆண்டுகளில் நம் மாநிலம், இத்துறையில், விரைந்து முன்னேறியுள்ளது.

மதுரைச் சரகத்தில் இன்றுள்ள நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் 43 ; உறுப்பினர் 7,288 பேர். அரசாங்கத்தின் கடனுதவி ரூ. 67,050. இந்தச் சங்கங்களின் பங்குத்தொகை மதிப்பு ரூ. 3,52,565.

உறுப்பினராக உள்ள நெசவாளருக்கு மலிவான விலையில் நூல் வாங்கியளிப்பதும், நெய்து முடித்த ஆடைகளை விற்பதற்குத் துணைபுரிவதும், இச்சங்கங்களின் அலுவல்களாகும்.

**கூட்டுறவுக் குடிசைத் தொழிற்சாலைகள்**—மதுரைச் சரகத்தில் உள்ள இத்தகைய அமைப்புகள் ஆறு. இத்தொழிற்சாலைகளை இப்பொழுது தொழில் துறை கண்காணித்து வருகிறது. காந்திநிகேதன் கிராமக் கூட்டுறவுத் தொழிற்சாலை, வேளாண்மைக் கருவிகள் செய்தல், தோல் பதனிடும் தொழில் இவற்றிலே ஈடுபட்டுள்ளது.

**ஏனைய கூட்டுறவுச் சங்கங்கள்**—மதுவிலக்கினால் பாதிக்கப் பட்டவரின் நல் வாழ்வுக்காக, 5 மதுமரத் தொழிலாளர் சங்கங்கள் பணியாற்றுகின்றன. பதநீர் இறக்குவதற்காக மரமேறிகள் உரிமைச்சீட்டு பெறவேண்டும். அச் சீட்டுக் களைப்பெற இச்சங்கங்கள் அவர்களுக்குத் துணைபுரிகின்றன. கருப்பட்டி (பனைவெல்லம்) உற்பத்தி செய்தலையும், இச் சங்கங்கள் மேற்கொண்டிருக்கின்றன.

பதினேரு நாட்டுப்புற வங்கிகள் (Urban Banks) இம்மாவட்டத்தில் வேலை செய்கின்றன. வேலையாட்களின் கூட்டுறவுச் சங்கங்கள் 26 உள்ளன. இவற்றிலுள்ள மொத்த உறுப்பினர்கள் 7,507 பேர். இவர்களின் பங்குத் தொகை ரூ. 2,65,788. உறுப்பினர்கள் பெற்றுள்ள கடன் தொகை ரூ. 6,72,115.

மதுரைச் சரகத்தில் நான்கு விற்பனைச் சங்கங்கள் உள்ளன :—

(1) மதுரை மாவட்ட விற்பனைச் சங்கம், மதுரை.
(2) மதுரை மாவட்டக் கள்ளர் கூட்டுறவு விற்பனைச் சங்கம்.
(3) திருமங்கலம் விற்பனைச் சங்கம், திருமங்கலம்.
(4) மதுரை-இராமநாதபுரம் விற்பனையமைப்பு, மதுரை.

இந்தச் சங்கங்களில் 9,280 பேர் உறுப்பினராக உள்ளனர். இவர்களுடைய பங்குத் தொகையின் மொத்த மதிப்பு ரூ. 87,924. சங்கங்கள் தம் உறுப்பினருக்கு 5,91,469 ரூபாய் கடனாகக் கொடுத்துள்ளன. ரூ. 2,39,050 பெறுமான பண்டங்களை திட்ட காலத்தில் வாங்கி விற்றுள்ளன.

மதுரையிலுள்ள பாதுகாப்புப்படை மறுகில் (Armed Reserved line) நடந்த ஒரு கூட்டுறவு முயற்சி இங்கு குறிப்பிடத்தக்கது. ஒவ்வொன்றையும் கூட்டுறவு முறையிலே செய்யத்தலைப்பட்ட அங்குள்ளோர், கூட்டுறவின் பயனை நன்கு அனுபவிக்கின்றனர். தாங்களாகவே சிற்றுண்டிச் சாலை ஒன்றை நடத்துகின்றனர். அதில் கிடைத்த லாபமான 200 ரூபாயையும், தங்கள் மறுகுக்குப் பல வசதிகள் செய்து கொள்வதற்காகப் பயன்படுத்திக் கொண்டனர். அவர்கள் மறுகில் மின்சார வசதி செய்து தருவதற்காக ரூ. 17,202 ஒதுக்கப்பட்டுள்ளது. இவ்வாறு எல்லா மக்களும், தத்தம் கடமையை, உணர்ந்து, ஒன்றுகூடிச் செயல்படுவராயின் அவர்களது ஊர் செழிக்கும். ஊரின் முன்னேற்றம்தானே நாட்டின் முன்னேற்றம் ?

# முன்னேற்றப் . . .
# பாதையிலே !

---

## இரண்டாவது திட்டம்

உழவும், தொழிலும் ஒன்றிவளர்ந்தால் தான் நாடும் நன்னிலை அடையமுடியும். மக்களின் வாழ்வும், மடிமையும் பிணியும் இன்றி மாண்புடன் திகழும். எனவேதான் வேளாண்மையோடு, ஆலைகள் பலவற்றையும் நிறுவித் தொழிலை வளர்க்க வேண்டும் என்னும் பெரு நோக்கத்துடன் இரண்டாவது ஐந்து ஆண்டுத் திட்டம் மேற்கொள்ளப்பட்டது.

பெருந் தொழில்களை நாம் வளர்க்க எண்ணும்பொழுது அதனல் அடையும் பயன் பொதுமக்கள் அனைவரையும் சாரவேண்டும். இல்லெனில் பெரும் தொழிலால் ஒரு சிலர் ஆடம்பரமாக வாழவும், பலர் வறுமையால் நலிந்து வாடவும் நேரிடும். இப்பேருண்மையை உணர்ந்த நம் அரசாங்கமும், சோஷியலிஸ முறையில் அரசாங்கத்தை நடத்தத் தீர்மானித்தது. அந் நெறியிலேயே செயல்களையும் ஆற்றி வருகிறது.

பொது மக்களின் வளமான வாழ்வை எண்ணியே இரண்டாவது திட்டத்தின் பொது நோக்கங்கள் வகுக்கப்பட்டன. கணிசமான அளவுக்குத் தேசிய வருமானத்தைப் பெருக்கி அதன் மூலம், மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வழி காணப்பட்டுள்ளது. அடிப்படையான பெருந் தொழிலுக்கு ஆக்கங் கொடுத்து நாட்டை விரைவில் தொழில் மயமாக்க வேண்டும். இவ்வாறு செய்வதால், நாட்டிலுள்ள வேலையில்லாத் திண்டாட்டம், பெரும் அளவுக்குக் குறையும். வேலை செய்வோருக்கும் எண்ணரிய புதிய புதிய வாய்ப்புகள் கிடைக்கும். பொருளாதாரத் துறையிலே தற்சமயம் இருக்கும் மலைக்கும், மடுவுக்குமிடையே உள்ள வேற்றுமையும் குறையும்.

இவையெல்லாம் நம்முடைய குறிக்கோளை அடைவதற்குரிய சில வழிகளாகும். சோஷியலிஸ சமுதாயத்தை உருவாக்குவதிலே இந்த வழிகள் நம்மை நீண்ட தூரம் அழைத்துச் செல்லுமென்பதிலே ஐயம் இல்லை. ஆனால் நம்முடைய இறுதி லட்சியம் அது தான். அந்த அமைப்பு முறையை நாம் அமைத்தால் ஒழிய ஏழைகளுக்கு இனிய வாழ்வில்லை என்பதையும் அரசாங்கம் நன்கு உணர்ந்துள்ளது. எனவே அத்துறையில் முழுவெற்றி அடையும் வரை அமைதியின்றிப் பல ஆக்கப்பணிகளை மேற்கொள்ள வேண்டும். தளர்வின்றித் திட்டங்களை வெற்றியோடு முடிக்கவேண்டும்.

நாட்டின் செல்வ வளம் ஓர் இடத்திலேயே குவிந்துவிடாமல் எல்லாப் பகுதிகளிலும் பரவலாக இருக்கும் வண்ணம் நாட்டின் பொருளாதார நிலை அமைக்கப்படும். அதற்கேற்ற வண்ணம் தொழில்களைப் பரவலாக அமைக்கும்படித் திட்டக் குழுவும் வற்புறுத்தி உள்ளது.

பின் தங்கிய பகுதிகளை முதலில் கவனித்து அவைகள் வளம் பெறும் வகையில் ஆவன செய்யப்படும்.

இரண்டாவது ஐந்து ஆண்டுத் திட்டத்தின்படி நம் மாநிலத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ள தொகை 173 கோடி ரூபாய் ஆகும். இத்தொகையைக் கொண்டு நாம் கீழ்க்கண்டவாறு நம் மாநிலத்தை வளம்படுத்தத் திட்டங்கள் வகுத்துள்ளோம் :—

| துறைகள் | ரூபாய் (லட்சக் கணக்கில்) |
|---|---|
| மின்சாரம் .. .. .. .. | 5,759·80 |
| கிராம வளர்ச்சி .. .. .. | 1,710·00 |
| நீர்ப்பாசனம் .. .. .. | 1,365·20 |
| குடிசைத் தொழில்கள் .. .. | 1,425·00 |
| கல்வி (தொழிற் கல்வியும் சேர்ந்து) .. | 1,425·00 |
| மருத்துவம் .. .. .. | 879·40 |
| வேளாண்மை .. .. .. | 750·50 |
| சுகாதாரம் .. .. .. .. | 722 70 |
| பாதைகள் .. .. .. .. | 807·50 |
| பின் தங்கிய வகுப்புக்களின் முன்னேற்றம். | 599·50 |
| மனையிடங்கள் .. .. .. | 341·70 |
| கூட்டுறவு .. .. .. .. | 292·90 |
| கால்நடை வளர்ச்சி .. .. .. | 236·00 |
| காடுகள் .. .. .. .. | 146·20 |
| பால் பண்ணை .. .. .. | 142·60 |
| மீன்துறை .. .. .. .. | 124·40 |
| மண் வளம் பேணுதல் (Soil Conservation). | 118·70 |
| நகர் அமைப்புத் திட்டம் .. .. | 95·00 |
| நடுத்தரத் தொழில்கள் (Medium Industries) .. .. .. .. | 95·00 |
| உள்ளூர் ஆட்சி மன்றங்கள் .. .. | 95·00 |
| சமுதாய நலன் .. .. .. | 86·25 |
| ஒலி பரப்பு .. .. .. .. | 28·50 |

| துறைகள் | | | ரூபாய் (லட்சக் கணக்கில்) |
|---|---|---|---|
| புள்ளி விவரத் திட்டம் | .. | .. | 19·30 |
| விளம்பரம் .. .. | .. | .. | 14·30 |
| உழைப்பாளர் நலன் .. | .. | .. | 11·40 |
| இதர வகைகள் ... | .. | .. | 14 20 |
| | மொத்தம் | .. | 17,306·05 |

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவிலே நம்முடைய நாடு மகத்தான, இனிய மாறுதலை அடையும். உழவும், தொழிலும் உன்னத நிலையிலே விளங்கும். நாட்டின் வருமானம் நூற்றுக்கு இருபத்தைந்து பங்கு உயர்ந்திருக்கும். கோடி பேருக்கு மேல் புதிய துறையிலே பணியாற்றுவார்கள். அதனால் மக்களின் வாழ்வும் பன் மடங்கு வளம் பெறும்.

இந் நன்னிலையை அடைய மக்கள் அனைவரும் அரசாங்கத்துடன் ஒத்துழைப்பார்களாக! திட்டத்தின் வெற்றியே நாட்டின் வெற்றி. அதுவே மக்களின் வெற்றி. அதுவே வாழ்க்கையின் வெற்றி. இவ்வுண்மையை மறக்காமல் அனைவரும் ஒன்று பட்டு உழைப்போமாக! அப்பால் வெற்றிபெறுவோம் என்பதிலே தினையளவும் ஐயமில்லை.



சென்னை அரசாங்க அச்சுக்கூட சூப்பரின்டெண்டென்டாரால் அச்சிடப்பெற்றது.

